*Kumaran̲*

*Āram 3, muttu 44*

*June 17, 1926*

Record no. 313

Registered No. M. 1823.

உ
சிவமயம்.

"KUMARAN" Karaikudi.

# குமரன்

"என்கடன் பணிசெய்து கிடப்பதே."




வியாழக்கிழமை தோறும் வெளியிடப் பெறுவது.

"ஆலயந் தொழுவது சாலவு நன்று."   "திரைகட லோடியுந் திரவியந் தேடு."

ஆரம். ரு. } காரைக்குடி, அக்ஷயஞு ஆனிமீ ௩உ (17-6-26) { முத்து. சச

## கண்ணனும் முருகனும்.

இந்த மக்கள் அச்சத்தால் பல தெய்வங்களை வழிபடுகின்றனர்; அன்பினாலும் சில தெய்வங்களை வழிபடுகின்றனர். வீரன் இருளன், காட்டேரி, வெறியன், நொண்டி, சாமுண்டி முதலான சிறுதெய்வங்களின் வழிபாடு பெரும் பயத்தினால் மக்கள் ஆற்றும் வழிபாடே யாகும். முருகன் கண்ணன் திருமால் சிவபெருமான் முதலான தெய்வங்களை வழிபடுவது அனேகமாக அன்பிலே தழைத்தோங்கும் உண்மை வணக்கமாகவே கருதப்பெறலாம்.

***

முக்கியமாக அன்புக் கடவுளை—அழகுத் தெய்வத்தை—நம் தமிழ் நாட்டிலே முருகன் கண்ணன் இராமன் என்னும் திருப்பெயர்களால் வழிபடுவது வழக்கமா யிருக்கின்றது. பண்டை நாளில் மலைவாசிகளான தமிழ் மக்கள் முருகவேளுக்குப் பூசனை புரிந்து பணியாற்றிவந்தனர். பண்டைத் தமிழகத்தின் காடுகளில் சஞ்சரித்து வந்த தமிழ் மக்களான ஆயர்கள் கண்ணனைப் போற்றி வாழ்ந்துவந்தனர். நாகரிகம் முதிர முதிர, பல சமயங்களும் இந் நாட்டில் குடிபுகுந்து இடம்பெறலாயின. பின்னர், சைவ வைணவ சித்தாந்தங்களும் தளிரோடி இலைவீசி வளர்ந்தோங்க லாயின. இச் சமயங்களும் சித்தாந்தங்களும் விசேஷமாக வடநாட்டு ஆரிய மக்களாலேயே இந்நாட்டில் வளர்க்கப்பெற்றன. சரித்திர பரம்பரைவரலாறுகளுங் கூட எட்டிப் பார்க்க இயலாது, மருண்டு தடுமாறும் பண்டைப் பழங்காலத்திலேயே கண்ணனும் முருகனும் ஆரியரல்லாத பழங்குடிகளால் போற்றப்பட்டு வந்திருக்க வேண்டுமென்று ஆராய்ச்சியாளர் ஊகிக்கின்றனர்.

***

உண்மையில் கண்ணன் முருகன் இராமன் என்னும் பலபல திருப்பெயர்கள் புனைந்து நம் மக்கள் வாழ்த்தி வணங்கும் அழகுத் தெய்வம்; ஆரியருக்கும் சொந்தமன்று; திராவிடருக்கும் சொந்தமன்று; வடநாட்டிற்கும் சொந்தமன்று; தென்னாட்டிற்கும் சொந்தமன்று. அழகுத் தெய்வத்தின் மீது ஏகபோக உரிமை கொண்டாடும் வகுப்பினர் யாருமில்லை. கிறிஸ்து பிறக்க முன்னூறு ஆண்டுகட்கு முன்னரே கண்ணன் வழிபாடு இந்தியாவில் பரவி யிருந்ததென்று ஓர் கிரேக்க ஆசிரியர் அறிவிக்கின்றனர். முருகக் கடவுளின் வழிபாடோ, பண்டைத் தமிழ்மக்களின் பழமை-மாட்சியோடு, பிரிக்க முடியாதபடி பின்னிக் கிடக்கின்றது.

***

"ஒப்புடையன் அல்லன் ஒருவன் அல்லன் ஓர் ஊரன் அல்லன், ஓர் உவமன் இல்லி" என்று அப்பர் சுவாமிகள் கடவுள் இலக்கணத்தை அருளிச் செய்கின்றனர். "அப்படியும் அந்நிறமும், அவ்வண்ணமும்—அவன் அருளே கண்ணாகக் காணின் அல்லால், இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன், இவன் இறைவன் என்றெழுதிக் காட்டொணாதே." ஒப்பின்றி உருவின்றி ஓர் ஊருமின்றி, பார்க்குமிடமெங்கணும் நீக்கமற நிறைந்து விளங்கும் பரிபூரணாநந்தப் பழம்பொருள் அழகுத் தெய்வமே என்றும், அத் தெய்வத்தின் அருளினையே கண்ணாகப் பெற்றுள்ள அன்பர், தெய்வ ஒளியினை—தெய்வ அழகினை எங்கணும் தரிசித்து இன்புறுதல் கூடுமென்றும் அப்பர் சுவாமிகள் வற்புறுத்துகின்றனர். எனினும் பிற்காலத்தார் சமய சாத்திரச் சந்தடிகளிலே—வேதாந்த சித்தாந்த விவகாரங்களிலே—சாதிப் பூசல்களிலே, அழகுத்தெய்வத்தை மறந்துவிட்டது பெரிதும் வருந்தத்தக்கது.

***

முருகனும் கண்ணனும் ஒரு தெய்வத்தின் இருபெரும் பெயர்களேயாகும். உண்மைநெறி அறியாதார் வாதுசெய்து மயங்கிச் சிறுநெறிசென்று அழிகின்றனர். ஆராய்ச்சியறிவு பெற்ற மேன்மக்களது நெஞ்சினிலே சமய வேற்றுமை சாதி வேற்றுமை முதலான மயக்கங்களுக்கு இடமே யில்லை. கண்ணனையும் முருகனையும் ஒப்பிட்டு நோக்கி உண்மை காண்பதற்குப் பலபல ஆராய்ச்சி[illegible] தல் வேண்டும். கண்ண[illegible] வரும், என்றும் அழியா அழகின் இருபெருந் தோற்றங்களே — என்றும் குன்றாத் தெய்விகப் பேரன்பின் திரு அவதாரங்களே. பாலகிருஷ்ணன் பால சுப்பிரமணியன் இருவரும் என்றும் வாடாத இளமையின் இணையிலா வடிவங்களன்றே! இவ்விருபெருந் தெய்வங்களும் தீராத விளையாட்டுப் பிள்ளைகளாகவே நம் கண்முன் தோன்றுகின்றன. இளங் கோவியர் முன் கூத்தாடும் இளஞ் சிங்கம் கண்ணனென்றால், வள்ளியெனும் பெயர்வாய்ந்த பெண் தெய்வத்தோடு விளையாடல் புரிவோன் முருகனென்று நூல்கள் கூறுகின்றன. ஆயர்தம்கொழுந்து கண்ணனென்றால், மைவக்குறவர் மகிழ்ந்து போற்றும் மாபுதல்வன் முருகனென்று அறிஞர் கூறுகின்றனர். கீதை என்னும் ஞானகந்த அமுதகீதத்தைப் பொழிந்த காளமேகம் கண்ணனென்றால், சிவபெருமானுக்கும் நல்லறிவுச்சுடர் கொளுத்திய ஞானபண்டிதசாமி நம் முருகனையன்றே! இந்தியாவில் ஏற்கெனவே வாழ்ந்திருந்த பழந் தெய்வங்கள் பலபல. எனினும் முருகனும் கண்ணனும் இந்நாட்டில் என்றும் குன்றா இளமையோடேயும் தெய்வங்களாகவே விளங்குவரென்பதில் ஐயமில்லை. குழலூதிவரும் கண்ணனையும் மயிலேறிவரும் முருகனையும் நம்மக்கள் ஒருபொழுதும் மறக்கமாட்டாரென்பது திண்ணம்.

***

கண்ணனுடைய அன்பு, மக்கள் உலகத்தோடு அடங்கி அமைவதில்லை. அ[illegible]

# நகரமா? நரகமா?

(நகரவாசி நவில்வது.)

பண்டை நாளில் தமிழ் நாகரிகத்தின் பிறப்பகமாகத் திகழ்ந்தது கிராமமேயாகும். மலைகளில், காடுகளில் வதிந்த தமிழ் மக்கள் நாளடைவில் நாடுகளை—ஊர்களை அமைத்துக் கொண்டு நாகரிக வாழ்வு வாழத் தலைப்பட்டார்கள். கிராமங்களிலே தான் தமிழ் மொழியும் தமிழ் நாகரிகமும் தழைத் தோங்கி வளரலாயின. காவிரிப்பூம்பட்டினம் போன்ற சில பெரு நகரங்கள் அந்நாளில் காணப்பட்டன என்பது உண்மையே. எனினும் அவை, அரசர், வணிகர், உறைவிடங்களாகத்தான் அமைந்திருந்தன. பொதுமக்கள் கிராமங்களிலேயே வதிந்து வந்தனர். புவியரசர் நகரங்களில் வாழ்ந்தன ரென்றால் கவியரசர் நாடுகளிலன்றோ, வாழ்ந்து வந்தனர்.

ஃ ஃ ஃ

இந்நாளிலோ கிராமங்கள் விரைவில் அழிந்து வருகின்றன. நகரங்கள் வளர்ந்து பெருகுகின்றன. "நாடுகளைக் (கிராமம்) கடவுள் படைத்தார்; நகரங்களை மக்கள் படைக்கின்றனர்" என்று ஓர் ஆங்கில ஆசிரியர் கூறியுள்ளார். மக்கள் கைபுனைந்து இயற்றாத இயற்கைப் பேரழகு, காடுகளிலும் சோலை சூழ்ந்த நாடுகளிலுமன்றோ காணப்படுகின்றது! மனிதன் கைபட்ட இடத்தில் அழகுகுன்றிவிடுகின்றது.—அழுக்கு அதிகரிக்கின்றது. தற்கால நாகரிகமக்களுக்கும் கடவுளுக்கும் உள்ள தூரம் வரவர அதிகரித்து வருகின்றது. ஆகவே தெய்வ ஒளி—தெய்விக அழகு—தெய்வ மணம் வீசப்பெறும் இயற்கையின் இன்ப நிலையங்களான கிராமங்களை மக்கள் விட்டொழிக்கின்றனர். துன்பங்கள் கவலைகளின் நிலயங்களான—பல பல புதிய எமன்களின் இருப்பிடங்களான—நகரங்களிலே குடியேறுகின்றனர்.

ஃ ஃ ஃ

பழையகிராமங்களை வருணிக்கும்போது கவிகள் பலவகையான இயற்கையழகுகளைப் பற்றி வியந்து பேசுகின்றனர். பண்டை நாளில் பெரு நகரங்களும் கிராமங்களைப் போலவே விசேஷ சுகாதார வசதிகள் உள்ளனவாக விளங்கின. "ஊதைகள் சொரிவன உயிர் உறும் அமுதம்" என்பது முற்கால நாடு நகரங்களின் வர்ணனையாகும். மெல்லிய குளிர் பூங்காற்று சோலைகளின் இன்ப நறுமணம் சுமந்து வீசுகின்றது. இதனால் மக்களது உயிர் மேன்மேலும் பொங்கி அதிகரித்து வளர்கின்றது. உயிரை வளர்க்கும் சாவா மருந்து, தூய இளங் காற்றிலன்றோ காணப்படுகின்றது! இங்ஙனம் பண்டைநாளில் கவிகள் நாடுநகரங்களை வருணித்துள்ளார். இந்நாளில் புதிதாகப் புராணம் புனைவோர் நகர வருணனை செய்யத் தொடங்கினால், எவ்வாறு வருணித்தல்கூடும்?

காதினுள் சவ்வைஇடியெனக்கிழித்துக்
காற்றெனக் கூற்றென முடுகி,
எதிதென் றெண்ணிப்பார்ப்பவர் தங்கள்
இருசெவிமுகம்எனும் இவற்றில்
ஓதுதற்கரிதாம் வண்ணமாய்ப் புழுதி
உழக்கெனும் படியதாய் நிறைத்து
வேதனைப்படுத்தி மீறச்செலும் மோட் [டா
ரதம் பல நெருங்கும் அவ்வீதி.

இப்பாட்டு நமது புதிய நகரங்களின் திருவீதிகளை உளளவாறு வருணிப்பதாகும். நகர் வீதிகளின் சுகாதாரக் கேடு யாவருமறிந்ததே. எங்கே பார்த்தாலும் அழுக்கு, ஆபாசம், புழுதி! அழகென்பதின் அறிகுறி மருந்திற்கும் அகப்படுவதில்லை. இந்த நிலையில் மோட்டார்-எமன் புறப்படுகின்றது.

ஃ ஃ ஃ

இடிபோன்ற பெரு முழக்கம். செவிகள் செவிடுபடுகின்றன. காதினுள் சவ்வு என்னும் மெல்லிய தோலொன்று சப்தங்களை இழுப்பதற்குத் துணைபுரிகின்றதென்று உடல்-நூலார் கூறுகின்றனர். இவ்வுள்ளுறுப்பினைக் கிழித்தெழும் விகாரமான இவ்விடி முழக்கம் எங்கிருந்து வருகின்றது? இவ்வாறு யோசிப்பதற்கும் நேரமில்லை. உடனே காற்றெனக்கூற்றெனமுடுகிச்செல்லும் பெரும்பூதம் தோன்றுகின்றது. இது என்ன பேயா, பிசாசா! என்று நடுங்கிப்பார்க்கின்றோம். உடனே நமது மூக்கில் செவியில் முகத்தில் கண்களில் சொல்லொணாத வண்ணமாய்ப் புழுதி உழக்கு நிறைந்து விடுகின்றது இத்தகையநரகவேதனைக்குட்படுத்தி விரைந்து செல்லும் மோட்டார் ரதங்கள் பல நெருங்கிச் செல்வது இந்நாளில் நகர வீதிகளின் இலக்கணமாகும் என்று புதிய புராணிகர் தமது புதிய நகரப்படலத்தில் கூறுகின்றனர். ஐயோ! இது என்ன நகரமா? நரகமா? என்னும் ஐயம் நம்முள்ளத்தில் பிறக்கின்றது.

ஃ ஃ ஃ

புராணங்களில எழுகோடி நரகங்களை வருணித்திருப்போரும் தற்கால நகரங்களைப் பார்த்திருப்பாராயின் தங்கள் அபிப்பிராயங்களில் பலவற்றையும் மாற்றிக் கொண்டிருப்பரென்பது திண்ணம். பழயரௌரவாதிநரகங்களில் தள்ளி பாவிகளை இம்சிப்பதைக் காட்டிலும் இக்காலத்துப் புதிய நகரங்களாகிய நரகங்களில் பாவிகளைப் புதுக்குடியேற்றிவிட்டால் போதாதா? இக்கால நகரவாழ்க்கையைக் காட்டிலும் நரக வாழ்க்கையில் துன்பமிருப்பதாக எமக்குத் தோன்றவில்லை. என்ன ஆரவாரம், என்ன பூசல், எத்தனை கவலைகள், எவ்வளவு துன்பம், என்ன அழுக்கு, ஆபாசம், அழகின்மை, அருவருப்பு. கூலிபெறாத தோட்டிகளான பன்றிகளில்லாவிட்டால் சில நகரங்களில் மக்களென்ற நாமமே அழிந்து போயிருக்குமன்றோ? இவற்றையெல்லாம்பார்க்கும்போது நரக தண்டனைக்குப் பதில் தற்கால நகரங்களில் குடியிருக்கும் தண்டனையே பாவங்களுக்குத் தக்க பிராயச்சித்தமாகுமென்று புதிய தலபுராணிகர்கள் துணிந்து கூறுதல் கூடும்,

ஃ ஃ ஃ

அத்தினபுரம் உண்டாம்—இவ்
அவனியிலே அதற்கிணையிலையாம்;
பத்தியில் வீதிகளாம்;—வெள்ளிப்
பனிமலைபோல் பல மாளிகையாம்;
முத்தொளிர் மாடங்களாம்—அங்கு
மொய்த்து அளி(வண்டு)சூழ்மலர்ச் [சோலைகளாம்;
நத்தியல் வாவிகளாம்—அங்கு
நாடும் ரதிநிகர் தேவிகளாம்.

என்று பாரதி அத்தினபுரத்தை வருணித்துள்ளார். பத்தி பத்தியான வீதிகள்; வெள்ளிப் பனிமலை போன்ற பல மாளிகைகள்; முத்தொளிரும் மேல் மாடங்கள்—பொலிந்து விளங்கும் இம் மாநகரம், சோலை சூழ்ந்ததோர் பெருங் கிராமமே என்பது பாரதியார் கருத்து. நகர மெங்கணும் குளிர் பூஞ்சோலைகள், தாமரைத் தடாகங்கள். இத்தகைய இயற்கை யழகுகள் மலிந்து பொலியும் திருநகரம்,

கன்னங் கரியதுவாய்—அகல்
காட்சியதாய், மிகுமாட்சியதாய்,
துன்னற்கு இனியதுவாய்—நல்ல
சுவைதரும் நீருடைய முனையெனும்
வன்னத் திருநதியின்

கரையிலே, திருமகள் உறையுளாக அமைந்து விளங்குகின்றது. ஆனால் தற்கால நகரங்களோ இத்தகைய இயற்கை-வசதிகளின்றி, 'மூத்தா'ளின் அரசிருக்கையாகவே அமைந் திருக்கின்றன. இந்நகர—நரகங்களில் வாணிபம் வளர்ந்தோங்குதல் கூடும்; பொருள் வளம் பொலிந்திருத்தல் கூடும். ஆனால் மக்கள் உடல்வளமின்றி, ஒழுக்க வன்மை யின்றி, வாழ்க்கையில் வனப்பின்றி, விரைந்தழிகின்றனர் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

—

விரிந்து விரிந்து ஆனினங்களையும் பலவேறு பிராணிகளையும் தழுவுகின்றது. முருகனது அன்போ இயற்கையினையும் தழுவி நிற்கின்றது. அன்பு மூர்த்திகளான கண்ணனும் முருகனும் வீர மூர்த்திகளாகவும் காட்சி தருவது நன்கு சிந்திக்கத்தக்கது. உண்மையான வீரம், உண்மையோடிசைந்த பேரன்பிலன்றோ வேரூன்றி வளர்வதாகும். பேடித்தனமும் அடிமைத்தனமும் வெட்கமின்றி, தலையெடுத்து முகங்காட்டித் திரியுமிந்நாளில், கண்ணன் முருகன் என்னும்தெய்விகவீரர்தம் வழிபாடு, பலவகையான நம்பிணிகளுக்கெல்லாம் இன்றியமையாததோர் அருமருந்தாகுமன்றோ! "விசனப் பொய்க் கடலுக்குக் குமரன் கைக்கணை யுண்டு" என்னும் பெரு நம்பிக்கையோடு, தம்மைத்தின்னவரும் பெருங் கவலைகளை யெல்லாம் உதறித் தள்ளி யெழும் சிறுவரும் சிறுமியரும், கண்ணன் முருகனுக்கு உகந்த மெய்யடியாராவர். இவர்களே தமிழ் நாட்டின் தவப்பயன். இத்தகைய இளைஞர்களாலேதான், நமது நாடு புத்துயிர் பெறுதல் கூடும், இன்று ஆவி துறந்த கூடுபோல இருக்கும்நாட்டிடையே, புதிய உயிர்—புதிய எழுச்சி, புதிய சக்தி அலையலையாகப் பரவி எழுதல் கூடும். (பி. ஸ்ரீ,)



## சரித்திரப்பகுதி

### மகாத்மாவின் உண்மை வாழ்வு.

(காந்தியடிகள் 'நவஜீவனி'ல் எழுதி வரும் தற்சரிதம்.)

இரண்டாம் பாகம்.

அதிகாரம் ௪.

ஏமாறிப்போய் நான் பம்பாயை விட்டு வெளியேறினேன். இராஜகோட்டைக்குச் சென்றேன். எனக்குச் சொந்தமான காரியாலயம் திறந்துவைத்தேன். இங்கே மிதமான சௌகரியத்தோடு காலம் தள்ளினேன். விண்ணப்பமனு—மெமோரியல் மனு— தயாரித்து வந்ததில் திங்கள் (மாதம்) ஒன்றுக்கு சராசரி ரூபா முன்னூறு கிடைத்தது. இதற்குக் காரணம் எனக்குரிய ஆற்றலன்று; பிறர் செல்வாக்கே யாகும். ஏனெனில் என் சகோதரரது கூட்டாளிக்கு வழக்குகள் ஒழுங்காக வந்து கொண்டிருந்தன. உண்மையில் முக்கியமான மனு வகைகளும், என் சகோதரரது கூட்டாளியால் முக்கியமானவை யென்று கருதப்பெற்ற மனு வகைகளும் பெரிய பாரிஸ்டர்களுக்கே போய்ச் சேர்வது வழக்கம். ஏழை மக்களான கட்சிக்காரர்களுக்காகத் தயாரிக்கப்படவேண்டி யிருந்த மனு வகைகளே என் பங்கில் விழுந்தன.

தரகு (கமிஷன்) கொடுக்க லாகாதென்ற என் கொள்கையை நான் இவ்விடத்தில் கொஞ்சம் மாற்றிக்கொள்ளவேண்டி யிருந்தது, என்பதை ஒப்புக்கொள்ள வேண்டியதுதான். பம்பாயில் இக் கொள்கையினை நான் வழுவாது தழுவினின்றேன். இரண்டு சந்தர்ப்பங்களும் வெவ்வேறு சந்தர்ப்பங்களென்று எனக்கு அறிவிக்கப்பட்டது. பம்பாயில் தரகு கொடுப்பது தரகர்களுக்காகத்தான். இங்கேயோ வழக்கு அனுப்பிய வக்கீல்களுக்கு, தரகு கொடுக்கவேண்டியிருந்தது. பம்பாயிற் போலவே இவ்விடத்திலும், ஒருவர் பாக்கி யில்லாமல் எல்லா பாரிஸ்டர்களும் தங்கள் வருவாயின் ஒரு பகுதியினைத் தரகாகக் கொடுத்துவந்தார்கள். இதைப்பற்றி என் தமையனார் என்னோடு விவகரித்தார். அவரது விவகாரத்திற்கு என்னால் விடையிறுக்க முடியவில்லை. அவர் சொன்னார்:—"இதோ பார். நானும் வேறொரு வக்கீலும் கூட்டாளிகள். உன்னால் நடத்தக்கூடிய எங்கள் வழக்குகளை யெல்லாம் எப்போதும் உனக்கே அனுப்புவதில் எனக்கு இஷ்டமே. என் கூட்டாளிக்குக் கமிஷன் கொடுக்க மறுப்பாயேயானால், அதனால் எனக்கு சங்கடம் விளைவது திண்ணம், நீயும் நானுமோ கூட்டுத் தொழில் நடத்தி வருகிறோம். உன் வருமானம் நமது பொது வருமானமாகின்றது. அதில் எனக்கு பங்குரிமை யுண்டன்றோ? இந்த நிலைமையில் என் கூட்டாளியைக் குறித்து என்செய்வது? அதே வழக்கை வேறு ஒரு பாரிஸ்டருக்கு அனுப்புகிறார் என்று வைத்துக்கொள். அவருக்குக் கமிஷன் கிடைக்குமல்லவா" என்று இவ்வாறு விவகரித்தார். இவ் விவகாரம் என்னை ஏமாற்றிவிட்டது. நான் பாரிஸ்டர் தொழில் செய்யவேண்டுமெனின், தரகுகளைப் பற்றிய என் லட்சியத்தை இத்தகைய சந்தர்ப்பங்களில் வற்புறுத்தக் கூடாதென்று உணரலானேன். இவ்விதமாக எனக்குள் நானே விவகரித்துக் கொண்டேன். இன்னும் இதனை வெளிப்படையாகக் கூற வேண்டுமெனின், என்னை நானே இவ்விதமாக ஏமாற்றிக்கொள்ளலானேன் என்று கூறவேண்டி வரும். இதைத் தவிர வேறு எந்த வழக்கிலும் நான் எப்போதாவது கமிஷன் கொடுத்ததாக ஞாபகமில்லை என்பது இங்கே குறிப்பிடத்தக்கது.

இங்ஙனம் வரவுஞ் செலவும் ஒருவகையில் சரியாகும்படி தொழில் நடத்தி வந்தேன். இந்நாளிலேதான் என் வாழ்க்கையின் முதலதிர்ச்சியை உணரலானேன். பிரிட்டிஷ் உத்தியோகஸ்தன் எப்படிப்பட்டவனென்பதை இதற்கு முன் கேள்விப்பட்டிருந்தேன். ஆனால் இதுவரை அத்தகைய அதிகாரியோடு ஒருபோதும் முகமுகமாக உரையாடியதில்லை. காலஞ்சென்ற போர்பந்தர்ராணா ஸாஹெப் தம்பதவிக்குரிய பீடத்தில் வீற்றிருக்கு முன்னர், அவரை நெறிப்படுத்தும் அமைச்சர் வேலையை என் சகோதரர் பார்த்துவந்தார். அவ் வுத்தியோகத்தி லிருக்கும்போது, அவரைச் செந்நெறி செலுத்தாது சிறு நெறி செலுத்தியதாக ஒரு குற்றம் இச் சமயம் என் தமயனார் தலைமீது சுமத்தப்பட்டிருந்தது. இது போர்பந்தர் அரசியல் நிர்வாக அதிகாரியின் விசாரணையில் இருந்தது. அவருக்கு என் தமயன்மீது நல்லெண்ண மென்பதே யில்லை. இவ் வுத்தியோகஸ்தரை நான் சீமையிலிருக்கும்போது அறிமுகம்செய்திருந்தேன். சுமாராக அவரது நட்புரிமை எனக்குண்டென்று சொல்லலாம். இந் நட்பினை நான் பயன்படுத்திக்கொள்ள வேண்டுமென்றும், தமக்காக நல்வார்த்தையாடி நிர்வாக அதிகாரியின் தாபிமானத்தைப் போக்க வேண்டுமென்றும் என் தமயனார் கருதுவாராயினர். இது என் விருப்பத்திற்கு முற்றிலும் மாறாக இருந்தது. சீமையில் ஏற்பட்டிருந்த அற்பப் பழக்கத்தினை இவ்வாறு பயன்படுத்த முயலலாகாது என்பது என் எண்ணம். உண்மையாக என் சகோதரர் குற்றவாளியானால் என் சிபார்சால் என்ன பயன்? குற்றவாளி யல்லவென்றால் அவர் சாதாரண நேர்வழியில் ஒரு மனுவினை ஏன் அனுப்புதல் கூடாது? தாம் குற்றவாளியல்ல வென்ற நன்னம்பிக்கையோடு எத்தகைய முடிவினையும் ஏற்றுக்கொள்வதன்றோ அவர் தம் கடன். இவ்வாறு நான் எடுத்துரைத்த புத்திமதி என் சகோதரருக்கு உவகை யூட்டவில்லை. அவர் சொன்னார்:—"உனக்கு கத்தியவாரைப் பற்றி என்ன தெரியும்? உலகத்தை நீ இனிமேல்தான் அறிந்து கொள்ள வேண்டும். சிபார்சுதான் இங்கே செல்லும் காசு. சகோதரனுகிய நீ உன் கடமையைச் செய்யத் தவறுவது இழுக்கன்றோ? உனக்குத் தெரிந்திருக்கும் உத்தியோகஸ்தரிடம் ஒரு நல்ல வார்த்தை கூறிவிடக்கூடாதா?" என்று பேசினார். நான் மறுத்துரை யாடவில்லை. என் விருப்பத்திற்கு மாறாகவே குறித்த உத்தியோகஸ்தரிடம் தூது சென்றேன்.

அவரை அணுகுவதற்கு எனக்கு உரிமை யில்லையென்பதை அறிந்திருந்தேன். இதனால் என் சுயமதிப்பும் குன்றிப்போம் என்பதையும் உணர்ந்திருந்தேன். ஆனாலும், அவ் வுத்தியோகஸ்தரைப் பார்க்கவேண்டி அனுமதியும் பெற்றேன். பழைய நட்பினை அவருக்கு நினைப்பூட்டினேன். கத்தியவார் வேறு, சீமை வேறு என்னும் உண்மையை உடனே கண்டேன். சீமையில் ரஜாவிலிருந்த உத்தியோகஸ்தர் ஒருவரே இந்தியாவில் அதிகாரம் பூண்டு காட்சி தரும்போது வேறொரு மனிதர் ஆதலுங் கூடுமன்றோ? போர்பந்தர் நிர்வாக அதிகாரி நட்பினை ஒப்புக்கொண்டார். ஆனால் நான் அதனை நினைப்பூட்டியது அவருக்குப் பிடிக்கவில்லை. அதனால் அவர் செருக்கு முன்னினும் அதிகரித்தது. "சரி, சரி. பழைய நட்பை தப்பான வழியில் உபயோகப்படுத்திக்கொள்ளத்தான் வந்திருக்கிறாயோ? அப்படி யில்லையே" என்றிவ்வாறு அவர் முகத்தில் பதிந்திருந்த திண்மையும் செருக்கும் என்னை நோக்கி மௌனப் பிரசங்கம் செய்தது போலத் தோன்றியது. எது எப்படியிருந்தாலென்ன? நான் என் கதையைத் தொடங்கினேன். துரை பொறுமையிழந்துவிட்டார். "உன் தமயன் அயோக்கியன். உன் கடையைக் கட்டு. எனக்கு அவகாசமில்லை. ஏதாவது உன் தமயன் தெரிவித்துக்கொள்ள விரும்பினால் உத்தியோக முறையில் விண்ணப்பம் செய்து கொள்ளலாம்" என்று பதட்டமாகப் பேசினார். பதில் சரியான பதில்தான். எனக்கும் போதுமான விடைதான். எனினும், சுயநலத்திற்குக் கண் தெரியுமா? நான் என் புராணத்தைத் தொடர்ந்து படிக்கலானேன். சாஹிப் எழுந்து நின்றார். 'போ வெளியில் உடனே' என்று சொன்னார்.

"ஆனால் நான் சொல்வதை நன்றாகச் செவி சாய்த்துக் கேட்கவேண்டும், தயவு செய்வீர்களாக." என்றிவ்வாறு தொடங்கினேன். அவர் கோபும் முன்னினும் அதிகரித்தது. சேவகனைக் கூப்பிட்டார். 'இவனை வெளியே கொண்டுவிடு' என்று கட்டளையிட்டார். நான் இன்னும் பிதற்றிக் கொண்டேயிருந்தேன். சேவகன் உள்ளே வந்தான். கைகளை என் தோள்மீது வைத்தான். என்னை அறைக்கு வெளியே தள்ளினான். துரையும் போனார். சேவகனும் போய்விட்டான். நானும், பொங்கிப் புகையும் என் வெஞ்சினமுமாக மீண்டோம். உடனே ஒரு நிருபம் எழுதினேன். அதன் சாராம்சம் வருமாறு:—"நீர் என்னை அவமானப்படுத்திவிட்டீர். உமது சேவகனைக் கொண்டு என்னை வெளியே தள்ளச்செய்தீர். அதற்கு நீர் தக்க பரிகாரம் செய்யவேண்டும், இல்லாவிட்டால் உமக்கு விரோதமாக வழக்காடவேண்டி வரும். இதற்குப் பதில்—திரு

பம் ஒரு பணியாளன் விரைவில் கொண்டுவந்தான். "நீ என்பால் நாகரிகம் இல்லாது நடந்துகொண்டாய். உன்னைப் போகச்சொன்னேன்; நீர்போக மறுத்தாய். சேவகனைக் கொண்டு உன்னை வெளியேற்றுவதைத் தவிர எனக்கு வேறு வழியில்லை. அவனும் ஆபீஸுக்கு வெளியேபோகும்படி சொல்லிப் பார்த்தான். நீ இணங்கவில்லை. அதன்மேல் உன்னை வெளியே அனுப்புவதற்கு எவ்வளவு பலவந்தம் அவசியமோ அவ்வளவுதான் அவன் பலவந்தப்படுத்தலானுன். இனிஇஷ்டப்படி வழக்காட உனக்குஉரிமையுண்டு."

துரை அவர்கள் அனுப்பிய பதில்கிருபத்தைச்சட்டைப்பையிலிட்டுக்கொண்டு முடிசாய்ந்து வீடு சென்றேன். நடந்ததையெல்லாம் என் தமையனுரிடம் கூறினேன். அவர் துன்பத்திலாழ்ந்தார். எனினும் எனக்குச் சமாதானம் கூற வகையறியாது மயங்கினுர். அவர் தம் வக்கீல்–நண்பர்களோடு யோசித்தார். ஏனெனில் துரைக்கு விரோதமாக என் செய்வது என்பது எனக்குத் தெரியுமா? அச்சமயம் சர் பிரோஸ்ஷா மேத்தா இராஜகோட்டைக்கு ஒரு கேசுக்காக வந்திருந்தார். ஆனுல் என்னைப்போல் அனுபவமில்லாத பாரிஸ்டர் அவரைஎவ்வாறுபார்க்கத்துணிவது? ஆகவே என் வழக்கு சம்பந்தமான பேப்பர்களை யெல்லாம் அவர் அழைத்திருந்த வக்கீல் மூலமாக அனுப்பி மேத்தாவின் அபிப்பிராயத்தை வேண்டினேன். அவர் பின்வரும் செய்தி அனுப்பினுர். "இத்தகைய அனுபவங்கள் வக்கீல் பாரிஸ்டர்கள் பலர்க்கும் பொதுவாக உண்டென்று காந்தியிடம் தெரிவிப்பாயாக. அவன் சீமையிலிருந்து இப்போதுதான் வந்திருக்கிறுன். என்ன ஆத்திரக்காரனப்பா! பிரிட்டிஷ் உத்தியோகஸ்தர்களை அவன் தெரிந்து கொண்டானில்லை. ஏதாவது சம்பாதித்துக் கொண்டு சும்மா காலந் தள்ள வேண்டுமென்ருல் இந்த பேப்பர்களைக் கிழித்தெறிந்துவிட்டு அவமானத்தை மட்டும் சட்டப்பையில் போட்டுக் கொண்டு அடங்கிக்கிடக்கட்டும். துரைக்கு விரோதமாக வழக்காடுவதால் என்ன லாபம்! இதனுல் இவன் தனக்குத் தானே அனேகமாக நாசத்தைத் தேடிக் கொள்ளுகிறுன். உலக வாழ்க்கையை காந்தி இனிமேல் தான் தெரிந்து கொள்ள வேண்டுமென்று அவனிடம் சொல்லுவாயாக."

மேத்தாவின் புத்திமதிஎனக்கு நஞ்சுபோல் கைத்தது. எனினும் நான் அதனை விழுங்கி விட்டேன். அவமானத்தை அப்படியே சட்டப் பைக்குள் தள்ளிவிட்டேன். இதனுல் நன்மையே விளைந்தது. "இனி ஒருபோதும் இத்தகைய நிலைமையில் என்னை வைத்துக்கொள்ளமாட்டேன். இனி ஒருபோதும் சிநேகத்தை இப்போது உபயோகிக்க முயன்றது போல் தவருன நெறியில் உபயோகிக்கவும் முயல மாட்டேன்" என்று எனக்குள் சங்கற்பம் செய்துகொண்டேன். இவ்வுறுதியான சங்கற்பத்தினை இதற்கப்பால் உதறித்தள்ளும் குற்றத்திற்கு நான் ஆளானதே யில்லை. இம்முதல் அதிர்ச்சி என் வாழ்க்கை முறையினை முற்றிலும் மாற்றிவிட்டது.

## வழுக்கைத் தலை.

### நிபுணர்களின் கருத்து.

ஆப்பிரிகாக் காரர்களில் அனேகர் கொலைக் குற்றம் செய்கிறவர்களின் தலையை மொட்டையடித்து விடுகிறுர்கள். தலையில் மயிர் அதிகமாயிருந்தால் ஒருவர் பலசாலியென்று வெகு காலமாகக் கருதப்பட்டு வந்திருக்கிறது; சில கொடிய மிருகங்களுக்கு மயிர் அதிகமாயிருப்பதைஒருதிருஷ்டாந்தமாகச் சொல்லுகிறுர்கள். ஆனுல், மயிரில் இயற்கையாக பலம் கிடையாதென்றும், மயிர் இல்லாததற்காக பலம் குறைந்துவிடாதென்றும் நமக்கு அனுபவத்தில் தெரியும். யானைக்கு மயிர் அதிகமாயில்லை; ஆயினும் யானையின் பலம் அனைவருக்கும் தெரியும். மனிதன் முற்காலத்தில் மயிரடர்ந்து கிடந்ததாகக் கூறப்படுகிறது; ஆனுல் போகப்போக மனிதர்கள் மயிரே இல்லாதவர்களாகப் போகிறுர்கள்.

ஒரு தனிமயிரை யெடுத்துக்கொண்டு பார்த்தால், அது நேர்த்தியாகவும்,நீண்டதோர் குழாய்வடிவமாகவும் இருப்பதோடு, மூன்று பிளவுள்ளதாகவும் இருக்கிறது. மனிதருடைய தோலுக்கு நடசட்டைகள் இருப்பது போல் மயிருக்கும் உண்டு. பழுப்புநிறமான மயிரையுடைய ஒருவன் தலையில் ஒரு சதுர அங்குலத்துக்கு சுரு0 மயிர்கள் இருக்கின்றன. கறுப்புமயிரா யிருந்தால் சு00 மயிர்களே இருக்கின்றன. சாதாரணமாக கறுப்பு மயிரையுடைய ஒரு ஸ்திரீயின் தலையில் மொத்தம் லட்சத்து க0 ஆயிரம் மயிர்களும், சிவப்பு மயிர்த் தலையில் ந0 ஆயிரம் மயிர்களும் இருக்கின்றன.

சராசரி மாதம் உ அங்குல நீளத்துக்கு மயிர் வளருகின்றது. மொத்தம் வளருவதற்கு சு வருஷத்துக்கு மேல் பிடிக்காது. இதன் பிறகு மயிர் விழுகிறது. புதிய மயிர் முளைக்கின்றது. நமது கண் இமையிலுள்ள மயிருக்கு கரு0 நாள் தான் வாழ்வு. இது பலருக்கு ஆச்சரியமாகப் படலாம்.வருஷத்துக்கு ந தடவை நம் கண்ணைச் சுற்றியுள்ள மயிர் மாறிக்கொண்டே யிருக்கிறது.

மயிர் மிகவும் இலேசான வஸ்து. மின்சார ஓட்டத்துக்கு இடங் கொடுக்கக் கூடியது. காற்றில் கலந்த பொருள்களைக் கவரும் சக்தியுடையது. சுவாசப்பைக்குச் சமானமானது. ஒருவருடைய மயிரை இன்னெருவர் மீது முளைக்க வைக்கலாம். உயிர் போன பிறகுகூட சில மணி நேரம் வரையில் மயிர்வளர்ந்துகொண்டுதான் இருக்கிறது.

தலைமயிரிலிருந்து இன்ன ஜாதி யென்றுசொல்லிவிடலாம். மயிரின் பொதுவான அமைப்பில் வித்தியாசமில்லாத போதிலும், நிறம், உருவம், வர்ணம், முதலியவற்றை பூதக்கண்ணுடி மூலமாய்ப் பார்த்து, வித்தியாசம் தெரிந்து கொண்டு விடலாம். எந்த ஜாதி மனிதனு யிருந்தாலும், அவனுடைய மயிரைக் கொண்டு அவன்ஜாதியைக் கண்டுபிடித்துவிட முடியும். ஒரு மயிர் அகப்பட்டால் கூட போதும். குட்டையும் சுருட்டையுமாய் உள்ள மயிர் நீக்ரோ ஜாதியாரின் மயிர் நீளமாகவும் சுருட்டையில்லாமலும், கரடு முரடாகவும், உருவத்தில் உருண்டையாகவும் இருக்கிற மயிர் மங்கோலிய ஜாதியின் மயிர். சீனுக்காரர், ஜெப்பானியர், அமெரிக்க இந்தியர், முதலியவர்களுக்கு அப்படித்தானிருக்கும். ஐரோப்பியருடைய மயிர் வட்டமாகவும், கோழிமுட்டை உருவத்துடனும், செம்மட்டையாவும் இருக்கும். ஒரு மயிர் தட்டையா யிருப்பதற்கேற்றுப்போல் சுருட்டையாகவு மிருக்கும் உருண்டை வடிவமுள்ள மயிர் எப்போதும் சுருட்டை விழாது. அது கெட்டியாகவும் இருக்கும்.

தலைக்கு சதா தோப்பி, தலைப்பாகை போட்டுக்கொண்டால், மயிர் மூலமாகத் தலையைக் காப்பது அனுவசியமாகி விடுமென்று சொல்லப்படுகிறது. வரவர இதன் பலனுகத் தலையில் மயிர் குறைந்து, கடைசியில் வழுக்கையாகப் போய் விடும். மனிதனுடைய மூக்கு முன்காலத்தில் இன்னும் நன்ருகப் பெருத்து விருத்தியடைந்திருந்தது. இப்போதைப் போல் அதிகமான காரியங்களுக்கு முற்காலத்தில் மூக்கு உபயோகப்படாததே அதற்குக் காரணம். இயற்கை யென்பது ஒன்றிருப்பதால், செயற்கைக்குத் தகுந்தாற் போல் அது தன்னை மாற்றிக் கொள்ளுகின்றது. வெயில் அல்லது பனி அல்லது குளிரிலிருந்து தலையைக் காப்பாற்றத் தொப்பியும் தலைப்பாகையும் இருப்பதால்,மயிர் அனுவசியமென்று சாஸ்திர நிபுணர்கள் கூறுகிறுர்கள். இதைக் கேட்டுப் பலர் நடுக்கமடையலாம். ஒரு கூட்டத்தில் எல்லாரும் வழுக்கை மண்டையாக இருந்தால் அதெப்படி யிருக்கும்! ஆனுல் எல்லாம் பழக்க வழக்கங்களையே பொறுத்திருக்கிறது. தற்காலத்தில் ஒருவன் உடுத்தும் துணியை முற்காலத்தவர் கண்டால் கேலி செய்யக்கூடியதாக இருக்கின்றது. அதற்காக நமது உரிமைகளைக் கைவிட்டு விடுகிறேமா? வழுக்கை மண்டை எல்லாருக்கும் திடீரென்று உண்டாகிவிடப் போவதில்லை. கொஞ்சங் கொஞ்சமாகத்தான் அது நடக்கும். முகக்ஷவரம் செய்துகொண்டு, மீசை தாடி முதலிய எதுவும் இல்லாமல் பலர் இப்போது, இல்லையா? அது போல்தான் வழுக்கை மண்டையாய் இருந்தாலும்பலருக்கு ஸகஜமாகப்படும். க்ஷவரகனிடம் போய்த் தலையைக் கொடுப்பது பலருக்கு இப்பொழுதே கஷ்டமாகப் படுகிறது. அவர்களுக்கு வழுக்கைத் தலை எவ்வளவோ உபகாரமாயிருக்கும்.

நாம் வழுக்கைத் தலையாகப் போய்விட்டால் என்ன செய்வது என்று யாரும் கவலைப்பட வேண்டாம். எல்லாவற்றையும் போல் அதுவும் வரட்டும். அதனுல் யாருக்கும் நல்லதுமில்லை. கெடுதலுமில்லை, பிற்காலத்தவர் வழுக்கைத் தலையுடன் தான் இருப்பார்களென்று திடமாகத் தெரிந்துகொள்ள இன்னும் காலம் பிடிக்கும். [சு. மி.]



## திருவாரூர் திருத்தேர்.

### (தீக்கிரையான வரலாறு.)

ஜூன் எ-ந்தேதி திருவாரூர் ஸ்ரீ தியாகராஜ சுவாமியின் மகாரதம் வடம் பிடித்திழுக்கப் பெற்றது. இதுதான் தென் இந்தியாவிலுள்ள மிகமிகப் பெரிய ரதமாகும். இதன் விசித்திர வேலைப் பாடுகள் கண் கவர் வனப்பினவாயிருந்தன. இப் பெருந் தேர் நெருப்புக் கடவுளுக்கு விருந்தானது, பொதுவாகத் தமிழ் மக்களையும் சிறப்பாக திருவாரூர் மகாஜனங்களையும் துக்க சமுத்திரத்தில் முழுகச் செய்துவிட்டது. பயங்கரமான—அதி பரிதாபகரமான — இந்நிகழ்ச்சியின் சில விவரங்கள் வருமாறு:-

### காரணம் என்ன?

தேருக்குப் பின்புற மிருந்து அதிர்வெடிகள் போடப்பட்டதில், நெருப்புப்பொறி பறந்ததினுலோ, வேறெவ்வகையினுலோ, தேருக்குப் பக்கத்தில் சாசுவதமாக அமைக்கப்பெற்றிருந்த பெருங்கீற்றுக்கொட்டகையின் உச்சியில் தீப்பற்றிக்கொண்டது. பிறகு தீ, தேர்ச்சீலைகள் மூங்கில்கள் மரக்குதிரைகள் இவற்றில் பரவி யெரிய ஆரம்பித்தது. தியாகராஜஸ்வாமியை, சேதமின்றி, கயிற்றில் கட்டி இறக்கிக் காப்பாற்றிவிட்டார்கள். தேரின் மீதிருந்த குருமார்களும் சிப்பந்திகள் பிறரும் ஏணி வழியாகவும் தேர்த்தட்டு தேர்க்கால் வழியாகவும் இறங்கியும் இறக்கப்பெற்றும் உயிர் தப்பியது அதிசயமாகவே யிருந்தது.

### பயங்கரமான இரவு.

தேரிழுப்பதற்கு உ0,ந0 மைல் தூரங்களிலிருந்தும் வந்திருந்த பல்லாயிரக் கணக்கான மக்களும் வெருவி ஓடிப்போய்விட்டனர். விழாவின் இன்பக் காட்சி காணவந்த பக்தகோடிகள், மகா கோரமான இக் காட்சியின் கொடுமையைக் கண்டு திகிலடைந்து கதறலாயினர். அவ்விரவு முழுவதும் திருவாரூர் வாசிகளான உடு000 ஜனங்களும் 'தியாகராஜா தியாகராஜா' என்று ஓலமிட்டு வயிற்றிலும் மார்பிலும் வாயிலும் அறைந்துகொண்டு தெருவீதி யெங்கணும் அழுவோரும் தொழுவோரும் புரள்வோருமாயினர். தேரின் உயர்ந்த பகுதிகளில் தீ எரியும்போது, அனற்பொறிகள் காற்றின் மூலமாகக் கிளம்பி, சில வீட்டுக் கொட்டகைகளின் மீது விழுந்து அவற்றையும் எரித்துவிட்டது. இதற்கு அஞ்சி, கொட்டகைகளையும் கூரைகளையும் பிரித்தெறிவோரும், விலையுயர்ந்த ஆடை யாபரணங்களை எடுத்துக் கொண்டு ஓடுவோருமாய், நகர மக்கள் பலர் இரவைக் கழிக்கலாயினர். பொழுது புலர்ந்ததும், நகரத்தின் அலங்கோலக் காட்சி கல்மனத்தையும் கரைக்க வல்லதாக இருந்தது.

### இன்னும் சில விவரங்கள்.

நெருப்புப் பிடித்தவுடன், ஜனங்களெல்லோரும் 'தியாகராஜா, தியாகராஜா' வென்று பிரமித்துப் போய்க் கதறிக்கொண்டிருந்தார்களே யொழிய ஒருவராவது நெருப்பை அணைக்க முற்பட வில்லை யென்று 'சுதேசமித்திரன்' விசேஷ நிருபர் கூறுவது, வியப்பையும் விசனத்தையும் ஒருங்கே தருகின்றது. இது 'தன் முயற்சி'யில் நம்பிக்கை யற்று வாடும் நம்மக்கள் தன்மையினையே வெளியிடுகின்றது. எனினும் திருவாளர்கள் சாமிநாதபிள்ளை, ஜி. ரங்கநாத முதலியார், முதலிய சிலர் தைரியமாக ஏணிவைத்துத் தேர்மீது ஏறி, சுவாமியையும் சிப்பந்திகளையும் காப்பாற்ற முயன்றது மிகமிகப் பாராட்டத்தக்க பெருஞ் செயலாகும். இவர்களில் திரு சாமிநாதபிள்ளை கீழே இறங்கும் போது மயக்கத்தினுல் கைகள் தவறி விழுந்துவிட்டார். இவர் இன்னும் ஆசுபத்திரியில் சிகிச்சையிலிருப்பதாக அறிகிறேம். தேரில் நெருப்புப் பிடிக்கும் போது போலீசு டெப்டி சூபரிண்டெண்டெண்ட், இன்ஸ்பெக்டர், சப் இன்ஸ்பெக்டர் முதலானவர்கள் அவ்விடம் கூடியிருந்தும்,நெருப்பை யணைக்க உதவி புரிய இயலாது போனது விசனிக்கத்தக்கதே யென்று நேரில் விசாரித்த விசேஷ நிருபர் எழுதுவது, போலீஸ் அதிகாரிகளது அசிரத்தையையே காட்டுகிறது. நம்மை யாளப் பிறந்ததாகவே இவ்வதிகாரிகள் நம்புகின்றுர்; பொது மக்களின் பணியாளர்களே தாம் என்பதை மறந்துவிடுகின்றுர். இம்மகாரதத்தில் சுமார் சுடு வருஷங்களுக்கு முன் ஒருதரம் தீப்பிடித்ததென்றும் அதனை உடனே அணைத்துவிட்டார்களென்றும் சொல்லுகிறுர்கள்.

### சிற்பச் செல்வம் அழிந்தது.

நமது நாட்டின் சிற்பச் செல்வத்திற்கு ஓர் வெற்றிக் கோபுரம் போல் விளங்கிய திருத்தேர் அழிந்தது தமிழகத்திற்கே ஒரு பெரு நஷ்டமாகும். அத்தேர் எரிகையில், அக்காட்சி, மேகமண்டல மளவும் பாவி யெழுந்த சோதியாகத் தோன்றியதாம். எங்கணும் செவ்வானம் படர்ந்தாற் போன்ற தோற்றம்! எங்கணும் புகைமயம்! சுற்றுக்கு பத்துமைல் தூரம் இந்தசோதியைக் கண்டு இன்னதென்று தெரியாமல் பலரும் ஓடிவந்தனராம். எள்ளுப் போடவும் இடமின்றி நகரம் எங்கணும் கூட்டம்! 'தியாகராஜா!' என்று எழுந்த கோஷம் இரண்டு மணி நேரம் விண்ணைப்பிளந்த வண்ணமாயிருந்ததாம். தேர்களின் போரசான இத் திருத்தேரில் ஆவேசித்த தீ 'இது பொன்னின் சோதியோ; அன்றி இதுவோ அக்கினி பகவானின் விசுவரூபம்!' என்று சொல்லும்படி, ஆகாயம் அளாவிக் கொழுந்துவிட்டெரிந்ததாம். திருவண்ணுமலைக் கார்த்திகை தீபமும் இதற்கு நிகரோ! என்று கண்டார் கண்ணும் மனமும் மருளும்படி, சிறிய தீக்கடவுளது திருக்கோலத்தில், கோரத்தோடு கொடியதோர் பேரழகும் கலந்து குலாவியதாம்.

## அமராவதிபுதூரில் தீ.

### பறையர்கள் பாவம் பறிபட்டுப் போயது.

இவ்வூர்பறையர்சேரிமுற்றும் சென்ற வியாழனன்று இரவுசுமார் எ-மணிக்குத் தீக்கிரையாகிவிட்டது. மேற்குக்கோடி வீட்டின் அடுப்பிலிருந்து தீயானது பற்றியிருக்கிறது. காற்று மேற்கிலிருந்து கீழ்புறமாக அடித்தபடியால்எல்லாவீடுகளும் எரிந்து சாம்பலாகிவிட்டன. மனித உயிர்ச்சேதமில்லை. இரண்டு ஆடும் சில கோழிகளும் எரிந்துபோயின. ஒரு வீட்டில்கல்யாணத்திற்குவாங்கிவைத்திருந்த அரிசி காய் கறி முதலியன அப்படியே சாம்பராயின. வீடுகளிலிருந்த நெல்லும் குதிரிலிருந்தநெல்லும் உபயோகப்படாதவாறு கருகி எரிந்து போயிற்று. எல்லாரும் வெளியூர்கட்கு வேலைக்குச் சென்றுவிட்டபடியால் பாதுகாக்கவகையில்லாது போய்விட்டது. ஆணும் பெண்ணும் குழந்தையும் குட்டியும் பொட்டலில் கிடந்து தவித்த பரிதாபக் காட்சி பார்க்குந் தரத்ததன்று.பட்டினத்தடிகள் சன்னியாசம் வாங்கிய கதை ஏட்டில் பார்த்தோம். அப்படியே உடுத்த துணியுடன் அத்தனைபேரும் கண்ணீருங் கம்பலையுமாக நின்று தவித்தனர். அன்றிரவும் மறுநாளும் அவ்வேழைமக்கட்கு அன்னமளிக்கப்பெற்றது. இன்னுஞ் சில முக்கியப்பொருள்களும் பலர் உதவினுர். இந்த ஸ்தலத்தை அருளாளர்களான ராய. சொக்கலிங்கன் அவர்களும், சொ. முருகப்ப செட்டியாரும் சென்று பார்த்து மனங்கசிந்தனர். திரு சொக்கலிங்கச் செட்டியார் ஆண்கள் அனைவர்க்கும் கதர்ஆடை வாங்கிக் கொடுத்தார்கள். திரு சொ. முருகப்பசெட்டியார் அத்தனை பெண்களுக்கும் சேலைவாங்கிக்கொடுத்து உதவினுர்கள். தங்கள் பொருள்கள் அனைத்தையும் பறிகொடுத்துப்பரிதவித்துக்கொண்டிருந்த ஏழைமக்கட்கு இவர்கள் செய்த இந்தப் பேருதவி பெரிதும் ஆறுதலளித்தது. இப்படிச் செய்வதே உயரிய தர்மமாகுமென்று பொது ஜனங்கள் சொல்லிப்பாராட்டுகின்றனர் என்று ஒரு நிருபர் எழுதுகிறுர்.

## அமராவதிபுதூரில் உபந்யாசம்.

வைகாசிமீ நகஉ யன்று ஸ்ரீமாந் சொ. முருகப்பசெட்டியார்இவ்வூருக்கு வந்ததைமுன்னிட்டு தனவைசிய ஆண் பெண்களும் வல்லம்பர்களும் மற்ற குடிமக்களும் கூடி அன்புடன் வரவேற்று அவர்கட்கு நல்லுரை கூறினுர்கள். அதற்கு பதிலிறுக்குமுகத்தான், திரு முருகப்பசெட்டியார் ஓர்உபந்யாசம் நிகழ்த்தி பொது ஜனங்களின் அன்பைப்பாராட்டினுர்கள். பிறகு திரு பிச்சப்பா சுப்பிரமணியன் சில வார்த்தைகள் சொன்னதும், கூட்டம் ஆனந்தமாக நிறைவெய்தியது.



நாளென் செயும்! வினைதா னென்
செயும்! எனைநாடி வந்த
கோளென் செயும்! கொடுங்கூற்
றென் செயும்! குமரேசரிரு
தாளுஞ் சிலம்பும் சதங்கையும்
தண்டையும் ஷண்முகமும்
தோளுங் கடம்பும் எனக்குமுன்
னேவந்து தோன்றிடினே.

—கந்தரலங்காரம்

குமரன், காரைக்குடி.
அக்ஷய ௵ ஆனி௴ ௩௳.

## தீக்கடவுளின் திருவிளையாடல்.

தீ இன்னதென்பதையே மக்கள் அறியாதிருந்த காலம் ஒன்றிருந்ததென்று ஆராய்ச்சியாளர் அறிவிக்கின்றார். அது சரித காலத்திற்கும் மிகமிக முற்பட்டதோர் பண்டைப் பழங்காலமாகும். தீக்கடவுளை யறியாது மக்கள் வாழ்ந்துவந்த அந்நாளில், அவர்கள் அநாகரிகமாக்களாகவேயிருந்தார்கள். தீக்கடவுள் திருவருளால் தீயை உபயோகப்படுத்திக்கொண்ட பின்னரே, மக்கள் தம் அநாகரிக நிலைகடந்து, நாகரிகம் என்னும் ஏணியில் படிப்படியாக ஏறத் தொடங்கினர்.

பண்டைப் பழங்காலங்களில், உலக மெங்கணும் காடுகள் நிறைந்து செறிந்திருந்தன. நமது தமிழ்நாடும் ஒரு காலத்தில் அவ்வாறு காடடர்ந்ததாகவே யிருந்தது. மலைகளிலும் காடுகளிலும் சஞ்சரித்துவந்த மக்கள் நாளடைவில் நாகரிகமுற்று, காடு கெடுத்து நாடுகண்டு வாழத் தொடங்கினர். காடு கெடுத்து வாழ்வதற்கு நம் முன்னோர் நெருப்புக் கடவுளையே நற்றுணையாகக் கொண்டார். இதனாலன்றோ வேதகால மக்கள் தீயைக் கடவுளாக வழிபடுவாராயினர். தீச்சுடரையும் தீயின் சோதியையும் கண்டு வியந்த மக்கள், தீயே சிவபெருமான் திருவுருவமென்று கருதினர். பின்னர், தேவர்கூட்டத்திலே தீக்கடவுளும் சேர்க்கப்பெற்று ஒரு பிரதான தேவதையாக விளங்கினார். எரியோம்புதல் வேள்வியாகக் கருதப்பெற்றது.

தீயினால் விளைந்த நன்மைகள் எண்ணிறந்தன. தீமைகளும் பலபல. எனினும் பொதுவாக மக்களது நாகரிக முன்னேற்றத்திற்குப் பெருந்துணை புரிந்தது தீக்கடவுளேஎன்பதைநாம் மறந்துவிடலாகாது. தீமைகளின் உறையுளாயிருந்த காண்டவ வனத்தை அருச்சுனனும், அரக்கர் பேரூரான இலங்கை மாநகரை அநுமனும் தீக்கடவுளுக்கு உணவாக்கினரென்று இதிகாச கதைகள் கூறுகின்றன. இதனால் விளைந்த தீமையைக் காட்டிலும் நன்மையே அதிகமா யிருந்ததென்பது அவ் ஆசிரியர்களின் கருத்தாகும். சரித காலத்திலே, சில நூற்றாண்டுகட்கு முன்னர், ஆங்கிலேயர் தலைநகரான லண்டன்மா நகரம் நெருப்புத் தெய்வத்திற்குவிருந்தாயிற்று. இதனால் பிளேக் என்னும் பெருநோய் தாண்டவ மாடிவந்த பழைய லண்டன் அழிந்தது. பலபல சுகாதார வசதிகளோடு கூடிய — நாகரிக உலகின் திலகமான — புதிய லண்டன், பழைய நகரின் சாம்பரிலிருந்தும் எழுந்தது. இங்ஙனம் ஆங்கில சரிதம் கூறுகின்றது. ஆனால் பின்—விளைவு நன்மையேயெனினும், தீக்கடவுளின் திருவிளையாடல் நிகழ்ந்த காலத்தில் மக்கள் பட்டுள்ள கஷ்ட நஷ்டங்களுக்கு ஓரளவுண்டோ?

காட்டுத் தீ முதலான பெருந்தீ விபத்துகளை வருணிப்போர், அக் காட்சிகளின் கோரத்தை வருணிப்பதோடு அதனோடுகலந்துவிளங்கும் பயங்கரமான பேரழகையும் வருணித்துப் பேசுகின்றார். பண்டைநாளில் ரோமாபுரியிலே நெருப்புக்கடவுள் திருவிளையாடல் புரிந்தபோதுகொடுங்கோல் மன்னனான நீரோ என்பான் அக்காட்சி யழகை உவகையோடு பருகினான் என்றும், அம்மகிழ்ச்சியிலே ஈடுபட்ட மன்னன்,(மக்கள் தீயின் கொடுமைக்குஅஞ்சிவருந்திக் கதறிக்கொண்டிருந்தபோது) பிடிலும்கையுமாக இருந்து தீக்கடவுளின் திருவருளை வியந்து பாடிக்கொண்டிருந்தானென்றும் ரோமர் சரிதம் கூறுகின்றது.

திருவாரூர் திருத்தேர் தீக்கிரையான வரலாறு வேறொரு பக்கத்தில் வெளியிடப் பெற்றுள்ளது இக்காட்சி அதி பயங்கரமாகவும் பரிதாபகரமாகவும் இருந்தபோதிலும், இக் காட்சியிலே அக்கினி பகவானது பூர்ண வடிவமான பேரழகு பொலிந்து விளங்கியதென்று நேரில் கண்ட நிருபநேயர்கள் பத்திரிகை வாயிலாக அறிவித்துள்ளார். எனினும் தீக் கடவுள் திருவிளையாடலால் தமிழகத்தின் சிற்பச் செல்வம்—திருத்தேர்களின் பேரரசு — நாசமுற்றது. இது தற்கால நிலையில் தமிழ்நாட்டிற்கு ஈடுசெய்ய முடியாததோர் பெரு நஷ்டமே யாகும். எரிமலைகள் நெருப்பைக் கக்கிக்கொண்டு எங்கும் ஊழித் தீ போல நாசம் விளைத்த காலத்திலும், அஞ்சாநெஞ்சு படைத்த ஜப்பானிய ஆண் சிங்கங்களும் பெண் சிங்கங்களும் முன்னினும் பன்மடங்கு ஆவேசத்தோடெழுந்து, விதியோடு பொருது விதியையும் முதுகுகண்டு வெற்றிமாலை சூடி விளங்குகின்றார். ஆனால் 'தியாகராஜா! தியாகராஜா!!' என்று வெறும் வாயால் புலம்பிக்கொண்டு, கைகால்களையும் அசைக்க வகையறியாது சும்மா சோம்பிக் கிடந்து சுகம்பெற நினைக்கும் நம் மக்களுக்கு 'தீக்கடவுளின் திருவிளையாடல்' என்றால் அது சகிக்க முடியாததோர் ஆபத்தே யன்றோ? தீக் கடவுள் திருவாரூர்த் தேர்மீது ஊர்ந்து தாண்டவமாடியதோடு அமையாது, தமிழகத்தின் வேறு சில பகுதிகளிலும் விளையாடல் புரிந்ததாக அறிகிறோம். சமீபத்திலுள்ள அமராவதி புதூரிலும் தீக்கடவுள் புகுந்து



காற்றோடு தோழமை பூண்டு பஞ்சைகளான பறையர்களது குடிசைகளை யெல்லாம் அதம் செய்துவிட்டார். ஐயோ! இதுவும் தீக் கடவுளுக்குஒரு திருவிளையாட்டா? 'நரிக்குக் கல்யாணம் நண்டுக்குப் பிராணாவஸ்தை' என்றபடி, ஏழை மக்களின் வீடு வாசல்களையும் சாமான்களையும் எரித்த தீ, வாயில்லாப் பிராணிகள் போன்ற அம்மக்களது வயிற்றில் பற்றிய தீயாகவே முடிந்தது. ஆனால் இத்தகைய சந்தர்ப்பங்களிலேதான் கருணைக்கடலான இறைவன் மக்களைச் சோதிக்கின்றான். கஷ்டங்களைக் கண்டு அஞ்சாது அவற்றை நிவர்த்திக்க முயற்சிகள் நடைபெறுகின்றனவா? கஷ்ட நஷ்டங்களுக்கு உட்படுவோர்மீது பிறர் கருணைகூர்ந்து உதவி செய்ய முற்படுகின்றனரா? இங்ஙனம் மக்களது இதயத்தை இறைவன் சோதிக்கின்றான். ஏழை-மக்கள் துன்பம் தம் நெஞ்சிலே பட, இரங்கிப் பணியாற்ற முற்படுவதே, தீ விபத்துகள் போன்ற பெரு விபத்துகள் ஏற்படுங்காலங்களில், நன்மக்களை எதிர்நோக்கி நிற்கும் கடமையாகும்.

## எண்டிசைக் காட்சி.

### விலை ஏறுமா?

ரப்பர் விலையானது வர வர்க்குறைந்து வருவதில் பலர் கவலை கொள்கின்றனர். ரப்பர் விலை இறங்குதற்கு வியாபாரிகளின் சூழ்ச்சியே காரணமாகு மென்று கூறவேண்டியதில்லை. உலகத்தில ரப்பர் பயிர் மிகுதியாய் விட்ட தென்று முன்னர்க் கூறப்பட்டது, எனினும் வருடந்தோறும் ரப்பர் கொள்முதல் விலை ஏறிக் கொண்டே வருவதாக ஏற்றுமதிக் கணக்கிலிருந்து தெரிகிறது. உலகத்தில் ரப்பரின் உபயோகமும் பல வழியிலும் விரிந்து வருகின்ற தென்பதை யாவரும் அறிவர். இப்போது விலை இறங்கியிருப்பதைப் பற்றி ''பிளாண்டர் அண்டு மைனர்ஸ் கெஜட்'' பின்வருமாறு குறிப்பிடுகிறது:

> சிங்கப்பூர் மார்க்கெட்டில் அமெரிக்கர்கள் தாராளமாகச் சரக்கெடுக்கலாம். அப்படியிருந்தும் மார்க்கெட்டு சம்பலாய் இருப்பதைப் பார்க்க நமது அமெரிக்க நண்பர்களுக்கு அதிகம் தேவையில்லை யென்று தெரிகிறது. நிலக்கரிக்குறைவினால் ரப்பர் தொழில் ஆலைகள் வேலை செய்ய முடியாமற் போகவே ரப்பர் விலை குறையத் தொடங்கியது. இந்தச் சமயத்தைக் கைவிடப் படாதென்று விலையறவே குறைந்து போகும்வரையில் அமெரிக்கர்கள் வியாபாரத்தை நிறுத்தி வைத்திருக்கிறார்கள். அதிகம் குறைந்து போனதாகக் கண்டவுடனே பெரிய கொள்முதல்கள் செய்ய வந்துவிடுவார்கள். பொது நிலைமையையும் கவனிக்க வேண்டும். தற்சமயம் தேவையும் ஸப்ளையும் சமப்பட்டு நிற்கிறது. அசாதாரணமான விஷயங்கள் ஏதும் நேர்ந்தாலல்லாமல் அடுத்த மூன்று வருஷ காலத்துக்கும் பவுன் கஇ ஷில்லிங்கிலிருந்து உஷில்லிங்காகவே விற்கு மென்ற எமது அபிப்பிராயத்திலேயே உறுதியாக நிற்கிறோம்.''

இப்பொழுது லண்டன் விலை ஒரு ஷில்லிங் ஏழரைப் பென்ஸாக இருக்கிறது. மேல் எடுத்துக் காட்டப்பெற்றிருக்கிற கருத்துப்படி விலையானது இதைவிடக் குறையாதென்று கூற முடியாவிட்டாலும் கட்டாயம் விலை யேறுமென்று கூற இடமிருக்கிறது.

### கிறிஸ்து பெருமானும் — — — — அருளொழுக்கமும்.

கிறிஸ்தியாது பழைய ஆகமத்தில் கூறப்படும் பத்து விதி விலக்குகளில் 'கொலை செய்யாதே!' என்பதும் ஒன்று. புதிய ஆகமத்திலே கிறிஸ்து பெருமான் இக் கொள்கையினை ஒப்புக்கொண்டு, இதற்கு ஓர் புதிய விரிவுரையும் செய்துள்ளார் என்று திரு. ஆண்ட்ரூஸ் துரை கூறுகிறார். இவ்விரிவுரையின்படி, சினம் இகழ்ச்சி, புறங்கூறுதல் என்னும் தீக் குணங்களாலும் ஒருவன் தன் சகோதர மனிதனைக்'கொலை'புரிதல் கூடும். கத்தி முதலிய அழிபடைகள் உடம்பையே அழிக்கின்றன. வெஞ்சினம் முதலிய இழி குணங்கள் ஆன்மாவையும் வதைக்கின்றன. இங்ஙனம் கிறிஸ்து அருளிக் கூறியும், கிறிஸ்தவர் 'கொலை செய்யாதே!' என்னும் சூத்திரத்திற்குச் சில புறநடைகள் வகுத்துள்ளார். இவையாவன:—
(க) போர் செய்கையில் கொலை செய்யலாம். (உ) குற்றவாளிகளைத் தூக்கிலிட்டுக்கொல்லலாம். (ங) மிருகங்களை வயிற்றுப் பெருமான் பொருட்டு வதம் செய்யலாம். ஆனால் இப்புற நடைகளுக்கு ஆதாரம் என்னை? கிறிஸ்துவே அறிவார்!

### ருஷிய ஞானியும் — — — — அருள் நெறியும்.

மேலைநாடுகளில் சமீப காலங்களில் கிறிஸ்து பெருமானது அருளொழுக்க நெறியினை உள்ளவாறு வற்புறுத்திய பெரியார் டால்ஸ்டாய் என்னும் ருஷிய முனிவரே யாவர். நவநாகரிக மயக்கிலும் பகட்டிலும் மயங்கிவிடாது, அதன் குறைகளை முதலில் நன்கு உணர்ந்து வெளியிட்டவர் இவரே. இக் குறைகளுக்கெல்லாம் ஒரே நன்மருந்தாவது, இம்சைநெறியினை விடுத்து, கிறிஸ்து பெருமானது அருள் நெறியினை—அன்பு நெறியினை—ப் பின்பற்றி யொழுகுவதே என்பது டால்ஸ்டாயின் கொள்கை. அருள்நெறி பிடிப்போர் தொகை மிகமிகக் குறைந்திருப்பினும், அன்னார் பங்கிலேதான் ஆண்டவன் இருக்கின்றான் என்றும் ஆண்டவன் கட்சியே முடிவில் வெற்றிபெறும் என்றும் டால்ஸ்டாய் கூறுகிறார். நாகரிக மேலைநாடுகள் இன்று பொன்னேபோல் போற்றி வரும் இம்சை நெறிவேறு; இக்காட்டினர் வாயால் போற்றி உள்ளத்தால் அவமதிக்கும் கிறிஸ்துவின் திருநெறி வேறு. இவ்விரண்டும் ஒன்றோடொன்று முரண்படுவன வாகும். இக் கொள்கை யிரண்டனுள் ஏதாவதொன்று இறந்து படுவது திண்ணம்— என்று டால்ஸ்டாய் முனிவர் கூறுகிறார். இறப்பதேது? எஞ்சியிருப்பதேது?—பழைய கிறிஸ்துவின் கொள்கையா? புதிய கிறிஸ்தவர் அநுஷ்டானமா?

### டால்ஸ்டாயும் — — — — மகாயுத்தமும்.

அருளொழுக்கம் அல்லது அஹிம்ஸாதர்மமே உலகம் உய்யும் நெறி யாகுமென்று டால்ஸ்டாய் போதித்த காலத்தில், உலகம் அவர் கொள்கையை ஏற்றுக்கொள்ளத் தயாராகவில்லை. அவர் உலக இயல் அறியாத சாது வென்றும், அநுபவ ஞானமில்லாமல் கேவலம் கனவு காண்போரென்றும் ஐரோப்பிய—அமெரிக்க உலகம் அவரைநிந்திக்கத்தொடங்கியது. ஆனால் சென்ற மகாயுத்தம், டால்ஸ்டாய் அநுபவ ஞானி யென்பதை மெய்ப்பித்து விட்டது. இன்னும் ஒரு மகாயுத்தத்தை உலகம் தாங்க மாட்டாதென்று போர்க்கலை நிபுணர்களும் இப்போது அபிப்பிராயப் படுகின்றார். பகுத்தறிவுள்ள மக்கள் பித்தர்களாகி அழிபடை தாங்கி மண்டை




பினாங்கு, ஆனி௴ ௧௳.

சென்னை உண்டியல் விலை நூற்று ஐம்பத்துநான்கு.
ஈயம்விலை நூற்றுமுப்பத்து ஏழு.
ரப்பர் விலை எண்பத்தெட்டு.

சைகோன், ஆனி௴ ௧௳.

சென்னை உண்டியல் விலை நூற்று ஐம்பத்துஏழு.
சிங்கப்பூர் வட்டம் ஒன்று.

களவும் தொண்டைசுவளயும் கிழித்து மாநும் போர் முறைகள், புதிய ஆராய்ச்சி யறிவைத் துணையாகக் கொண்டு இன்னும் அபிவிருத்தி யடையுமாயின், இவை மக்களை ஒரே யடியாக இருகால் விலங்குகளாக்கி விடியா இருளில் வீழ்த்திவிடும் என்று அறிஞர் பலரும் இன்று கருதுகின்றூர். இந்த நிலையில், இந்தியதேசீய இயக்கம் அஹிம்சாதர்மம் என்னும் படைதாங்கி, அருள்—முரசு கொட்டி, அறப்போர் புரிந்து சுயராஜ்யம் அடைய முயல்வது, ருஷிய முனிவரான டால்ஸ்டாய்க்கு உவப்பளிக்கும் நன்முயற்சியே யாகும்.

## உள்ளூர்ச் செய்தி.

**நாகநாதபுரம்:**—ஸ்ரீ நாகநாதேசுவர சுவாமிக்கு நிகழும் அக்ஷயஹு ஆனி மீ ௰௨ சனிக்கிழமை முதல் உற்சவ ஆரம்பித்து, ௩௩௨ மகாரதோற்சவம் நடைபெறும்.

**தீவிபத்து:**—சென்ற புதன்கிழமை அரு. அ. வீட்டில் ஒரு வைக்கோற் போரில் தீப்பிடித்தது காரணமாக ஒட்டுக்கொட்டகைக்குக் கொஞ்சம் சேதம் ஏற்பட்டது.

**இடியும் மழையும்:**—சென்ற திங்கட்கிழமை, இவ்வூர் ஊருணிமுதலான நீர் நிலைகளின் குறை தீர நல்லமழை பெய்தது. பெருமழையோடு பேரிடி முழக்கமும் கலந்துகொண்டது. முத்துப்பட்டணத்தில்இடிவிழுந்தது; சேதமில்லை.

### பள்ளத்தூர்.

இவ்வூர் ஸ்ரீ மீனாட்சிசுந்தரேசுவரர் பிர்மோற்சவம் நாளிது ஆனி மீ உஉ௳ முதல் ஆரம்பமாகி நடைபெறுகிறது. ஆனி ௨௯ ரதோற்சவம்.

### திருக்கடவூர்.

இவ்வூர் ஸ்ரீ அபிராமம்பாள் சமேத ஸ்ரீ அமுர்தகடேசுவர ஸ்வாமி கோவில் அஷ்ட பந்தன மகாகும்பாபிஷேகம் நாளிது ஆனி மீ ௭௨ சோமவாரம் உதயாதி ௯ நாழிகைக்குமேல் சிம்ம லக்னத்தில் நடைபெறும்.

### புதுவயல்.

இவ்வூர் ஸ்ரீ சாஸ்வதி சங்கத்தின் நாளிது மாதக் கூட்டம் நாளிது வைகாசி திங்கள் ௩௧-ம் நாள் ஞாயிற்றுக்கிழமை மாலை ௭ மணி முதல் இவ்வூர் பிள்ளையார் கோவில் பக்கத்தில் காரைக்குடி ஸ்ரீமான் ஆவி. லெ. அருணசலச் செட்டியார் அவர்கள் தலைமையில் பழ. இராமனுதச் செட்டியார் 'பெண் கல்வி' என்பதைப்பற்றி சொற்பொழிவு செய்ய தலைவர் முடிப்புரையோடு இரவு ௯௩ மணிக்கு சபை இனிது நிறைவெய்தியது.

### சாக்கோட்டை.

இவ்வூரில் காரைச் சிவனடியார் திருக்கூட்டத்துச்சார்பில் இவ்வூரில் நடைபெறும் உய்யவந்த அம்மன் திருவிழாவில் ஆடு வெட்டுவதை முன்னிட்டு நாளிது வைகாசி மீ ௩௧-ம் நாள் ஞாயிற்றுக்கிழமை இரவு ௧௦ மணி முதல் ஊருணி வடகரையில் ஸ்ரீமாங்களான பழ. வினைதீர்த்தான் செட்டியார், ராம. வீரப்பசெட்டியார் பழ. இராமனுதச்செட்டியார், காரைக்குடி. ஆவி.லெ. அருணசலச் செட்டியார் ஆகியவர்கள் சொற் பொழிவு செய்தார்கள். தண்டெப்பிரசாம் சிவர் ஒட்டுத்தான் பரப்பப்பட்டனயென கா. மணிவாசகன் அறிவிக்கிருர்.

### ஆத்தங்குடி முத்துப்பட்டணம்.

நாவுக்கரசு நற்சபை விசேடக் கூட்டம் இவ்வூர் திருவிழாவில் நாளிது வைகாசித் திங்கள் ௨௪-ம் நாள் புதன்கிழமை பிற்பகல் ௫ மணிக்கு தண்ணீர் பந்தரில், காரைக்குடி சிவனடியார் திருக்கூட்டத் தலைவரும், 'குமரன்' பத்திராதிபருமான திருவாளர் சொ. முருகப்ப செட்டியாரவர்கள் தலைமையில் திருவாளர்களான காரைக்குடி சா. கணேசன் செட்டியார், ஆவி. லெ. அருணசலச் செட்டியார், ராம. திருநாவுக்கரசு செட்டியார், கண்டனுர் தெ. அரு. சித. இராமசாமி செட்டியார், ஆ. முத்துப்பட்டணம் திருவாளர் ராம. அழ. அருணசலச் செட்டியார் ஆகியவர்கள் சொற்பொழிவு நிகழ்த்தினர்கள். தலைவரவர்கள் முடிப்புரையோடு இரவு ௧௦ மணிக்கு இனிது நிறைவெய்தியது.

### ஸ்ரீ மீனுக்ஷி சுந்தரேசர் கலாசாலை கிழச்சிவப்பட்டி.

தேகாப்பியாசச் சாலைத் திறப்பு, நிகழும் வைகாசி மீ ௨௳ ஞாயிற்றுக்கிழமையன்று 'தென் இந்தியா மனேதத்வ போதனசங்கம்' 'இராமகிருஷ்ணவிவேகானந்த சங்கம்' இவைகளின் தலைவரும், சுவாமி விவேகானந்தா அவர்களின் சீடருமான மதுரை ஸ்ரீலஸ்ரீ சுவாமி தயானந்தா அவர்களால் திறந்து வைக்கப் பெற்றது. ௨௳ காலை ௧௦ மணிமுதல்௨௳ வரை சுவாமி தயானந்தாஅவர்கள் கலாசாலையைப் பார்வையிட்டு, தமிழ் ஆங்கிலம் முதலியவற்றில் ஒவ்வொரு வகுப்புப் பிள்ளைகளையும் பரீட்சை செய்து அபிப்பிராயமும் எழுதினர்கள். மாணவர் தமிழ்க் கழகத்தின் ஆதரவில் மாலை ௫ மணிக்கு ஓர் இனிய சபை கூடியது. சுவாமி தயானந்தா அவர்கள் 'பிறப்பின் பயன்'என்ற விஷயத்தைப்பற்றிஉபந்யசித்தார்கள். இடையிடையே ஓதுவார்களால் தமிழ்வேத பாராயணஞ் செய்யப்பட்டது.

### கண்டனுர்.

ஆண்டுவிழா:—இவ்வூர்இளைஞர் சங்கத்தின் முதலாவதாண்டு விழா நிகழும் ஆனிமீ ௭௨ காலை ௮ மணி முதல் பழைய மடத்தில் நடைபெறும். அவ்வமயம் காரைக்குடி, காரைச்சிவனடியார் திருக்கூட்டத் தலைவரும் 'குமரன்' பத்திராதிபருமான திருவாளர் சொ. முருகப்ப செட்டியாரவர்கள் தலைமை வகிப்பார்கள். திருவாளர்களான ஜி. கணபதி அய்யர், சா. கணேசன் செட்டியார், ஆவி. லெ. அருணசலச் செட்டியார், மு. நா. அ. நா. நாச்சியப்ப செட்டியார், சேவு. மெ. மெய்யப்ப செட்டியார், பிச்சப்பா சுப்பிரமணியன் செட்டியார் ஆகியவர்கள் சொற்பொழிவு நிகழ்த்துவார்கள். அவ்வமயம் அன்பர்களின் நல்வரவு எதிர்பார்க்கப்படுகிறது என இளைஞர் சங்கத்தார்அறிவிக்கிருர்.

### பினங்கு.

இங்கரைச் சார்ந்த வாலப்பூரில் வீற்றிருக்கும் ஸ்ரீ குமரபிரான் சந்நிதியில் அட்சயஹு வைகாசித் திங்கள் ௯௩-ம் நாளன்றுமகேசுவரபூஜைமுதலிய வைபவங்கள் நடைபெற்றன. இரத்தினபுரண பூஷிதராய் இந்திர விமானத்தில் எழுந்தருளி நடன சங்கீத வாத்தியத்துடனும் ஸ்ரீ முத்துமாரியம்மன் கரகத்துடனும் பஜனை கோஷ்டியுடனும் விழாக்கொண்டு காட்சி கொடுத்தருளினர். ௧௪-ம் நாள் இரவு அயலூர் நகரத்தாரால் சுவாமி புறப்பாடு செய்விக்கப்பெற்றது. வழக்கம் போல் ௧௪-ம் நாள் முதல் ௯௩-ம் நாள் வரை கணேசானந்த நாடக சபையார் அம்பிகைக்கு முன்பாக அமைந்துள்ள கொட்டகையில் மூன்று சரித்திரம் நடித்துக் காண்பித்தார்கள். இவ்விசாக விழாவும் வாலப்பூர் வாயலெப்பாஸ் நகரத்தார் மிக உற்சாகத்துடன் நடத்தி வருகிறது பாராட்டித்தக்கது யென்று பினங்கிலிருந்து ஒரு நிருபர் எழுதுகிருர்.

## முக்கிய விஷயம்.

நம்மவர்களின் நன்மையைக் கருதி கூட்டு வியாபார முறையில் ஒரே நிதானமான லாபத்துடன் விற்று வருகிற ஒரு பெரிய ஜவுளிக்கடை நம்மவர்கள் பலர் சேர்ந்து ஸ்தாபித்திருக்கும் முக்கிய விஷயத்தை கனவான்கள் கேட்டு மகிழ்ச்சி அடைவார்க ளென்று நம்புகிரேம்.

எங்களுடைய சொந்தத் தறியில் தயாராகிற புது புது மாதிரியான வேஷ்டி துப்பட்டா தினுசுகளும் பெங்களூர்ப் பட்டுக் கண்டாங்கிகளும் இன்னும் பலவூர் ஜவுளி தினுசுகளும் சகாய விலைக்கு கிடைக்கும்.

யார் யார் எந்தெந்த மாதிரி ஜவுளி தினுசுகளை விரும்புகிருர்களோ அந்தந்த மாதிரியே தயாரித்துக் கொடுக்கவும் அவரவர் பெயர்போட்டு பலமாதிரியான துப்பட்டாக்கள் குறித்த காலத்திற்குள் மிகக் குறைந்த விலைக்கு தயாரித்துக் கொடுக்கவும் தகுந்த வசதிகள் எங்களிடம் உண்டு.

விலாசம் :—

**மைசூர் ஜவுளி வர்த்தகசாலை,**

கோனப்பட்டு.

பிராஞ்சுகள் :— உறையூர், பெங்களூர் விட்டி, இராமசந்திரபுரம்.

---



## என்றும் இளமை.

[எழுபதாவது வயதில் இளைஞராக வளர்ந்த கலிகால மார்க்கண்டேயர்.]

'வேதநூற் பிராயம் நூறு' என்று ஆழ்வார் அருளிச் செய்கின்ருர். வேத காலத்தில் மக்கள் இயற்கை வாழ்வு வாழ்ந்தார்கள்; இயற்கையோடிசைந்த இன்ப வாழ்வு வாழ்ந்தார்கள். இதனுல் நீண்ட ஆயுள் பெற்றிருந்தார்கள். கள்ளங் கவடற்ற குழந்தை யுள்ளமும் ஆண்டில் முதிர்ந்த அனுபவத்தில் பழுத்த பெரியாராத நன்மதியும் வாய்ந்த வேத முனிவர்கள், ஆயுள் ஆரோக்கியம் ஐசுவரியம் வேண்டிப் பாடிய பலபாடல்களும் தோத்திரங்களும் மந்திரங்களும் வேதங்களிலே காணப்படுகின்றன. அவர்கள் சர்வ சாதாரணமாக நூறு வயது வாழ்ந்தார்கள்; 'நூறு' என்னும் எல்லைக் கல் தாண்டினவரும் பலராவர். ஆகவே வேத நூற் பிராயமாகிய நூறு, வேத காலத்தின் சராசரி வயது தான், லட்சிய வயதல்ல— என்று கொள்வதே பொருத்தமுடையதாகும்.

ஃ ஃ ஃ

பிற்காலத்தில் 'நூறு' என்பது மக்கள் வயதின் எல்லையாகவே கருதப்பட்டது. 'மக்கட்கு வயது நூறல்லதில்லை' என்னும் கொள்கை நமது நாட்டிலே வழங்கலாயிற்று. மக்களுக்குச் சராசரி வயது எழுபது என்று கிறிஸ்துவேதம் கூறுகின்றது. நாளடைவில் மக்கள் இயற்கை வாழ்வை மறந்து செயற்கை வாழ்வு வாழத் தலைப்பட்டதால், ஆயுள் குன்றி ஆரோக்கியம் குன்றி அகால மரணத்திற்கு இரையாளுர்கள்.

கூற்றம் இல்லை, ஓர்
குற்றம் இலாமையால்,

இராம ராஜ்யத்திலே ஒருவரும் இயற்கைச் சட்டங்களை மீறி ஒரு குற்றமும் செய்தாரில்லை. ஆதலால் அன்னர் கூற்றத்திற்கு (எமனுக்கு) அஞ்சின ரில்லை.—அதாவது அகால மரணமின்றி, சாதலும் மூத்தலுமின்றி, என்றும் மார்க்கண்டர்களாய் இளமை—வாழ்வு வாழ்ந்தார்களாம்.

ஃ ஃ ஃ

அரை நூற்றுண்டு நோயுற்று வாடிவருந்தி வாழ்ந்து, முற்ற முத்துக்கிழப் பருவம் எய்திய ஒருவர் எழுபதாவது வயதிலும் எழுபது வயதிற்குமேலும் இளமை பெற்று மார்க்கண்டனுக வளர்ந்து வருகின்ருர் இக்கலிகாலத்திலே—என்ருல் யார் தான் ஆச்சரியப்பட மாட்டார்! இவ் அற்புதம், மார்க்கண்டன் என்றும் பதினறு வயது பெற்ற அற்புதத்திற்குக் கொஞ்சமும் இளைத்ததன்று.

மைந்த, நீ நமை வழுத்தி மாசிலா
முந்து பூசனை முயன்ற தன்மையால்
அந்தம் இல்லதோர் ஆயுள் நிற்குயாம்
தந்து நல்கினும் என்று சாற்றினன்.

''மார்க்கண்டனே! நீ வினையை மதியால் மாற்ற முயன்று பூசனை புரிந்தாய். நீ முயன்ற பூசனையின் பயனுக அந்தமில்லாதோர் ஆயுள் பெற்ருய்'' என்று சிவபெருமான் அருளினர். மார்க்கண்டேயர் சிவபூசை வாயிலாக என்றும் இளமை பெற்ருர். ஸான்போர்ட் பென்னெட் என்பார் 'உடல்வலித் தொழில்' மூலமாக எழுபது வயதில் இளமைபெற்றுள்ளார்.

ஃ ஃ ஃ

சரியான தேக முயற்சியால் உடல்வலியுறுகின்றது. உடலின் கூறுகளான அங்கங்களெல்லாம்—சதைப்பற்றுகளெல்லாம் வளர்கின்றன, வளமுறுகின்றன, வலிமை பெறுகின்றன. இது இயற்கை—விதி. உனக்கு ஆரோக்கியம் வேண்டுமா? தேகக் கட்டு, தேகபலம் வேண்டுமா? நீண்ட ஆயுள் வேண்டுமா? இவற்றிற் கெல்லாம் உரியதோர் அற்புத அருமருந் துண்டு. இம்மருந்து வைத்தியர்களின் புட்டி (Bottle) களில்இல்லை; மூலிகைகளில் இல்லை; இது வேறோர் தெய்வத்தின் பூசனையும் அன்று. உடல் வலித் தொழில்—தேகாப்பியாசமுறை; இதுவே உடல் வலிமைக்குரிய வழி—நீண்ட ஆயுளுக்கு நேரான பாதை. காரணம் இல்லாத காரியம் விளைந்தது என்ற கணக்குப்போல் புராண உலகிலே கற்பிக்கப் பெறும் அற்புதம் அன்று, இது. ஒவ்வொரு காரியத்திற்கும் விதையிருப்பது போல, காரியத்திற்குக்காரணம்வித்தாகநிற்கின்றது வித்தின்றிவிளைவில்லை; காரணமின்றி, காரியமுமில்லை. வித்திலே மரம் அடங்கிக் கிடப்பது போல, காரணத்திலே காரியம் அடங்கிக் கிடக்கின்றது. உலகம்—இயற்கை, இத்தகைய காரண—காரிய விதிகளால் கட்டுப்பட்டிருக்கின்றது. காரணமில்லாமலே, இறைவனால் இயற்கைச்சட்டங்களை மீறி அற்புதங்கள் நிகழ்கின்றன என்று புராணங்கூறுகின்றது. இயற்கை விதிகளுக்குக் கட்டுப்பட்ட காரணங்களின்றி ஒன்றும் நிகழ்வதில்லை என்று புத்தம்புதிய அறிவுக்கலையான 'ஸயன்ஸ்' அறிவுறுத்துகின்றது. இளமை தேய்ந்து முதுமை எய்துவதற்குக் காரணம் என்ன? இதனை எவ்வாறு தடுத்தல் கூடும்? எத்தகைய 'காரண'த்தை விதைத்தால், 'என்றும் இளமை' என்னும் 'காரிய'த்தைக் கண்கூடாகக்கண்டு களித்தல் கூடும்? இத்தகைய ஆராய்ச்சியின் கதையே, கலியுக மார்க்கண்டான ஸான்போர்ட் பென்னெட் என்பாரின் கதையாகும்.

ஃ ஃ ஃ

கிழ உடலிலே—கிழ முகத்திலே—இளமை பொலிவை ஏற்றுவது எவ்வாறு? இதற்கு மருந்து வேண்டாம்; மந்திரம் வேண்டாம்; மாயம் வேண்டாம்; இயற்கைக்கு மாருக நிகழும் அற்புதமும் வேண்டாம். மக்கள் உடல்—நிலைக்குத் தக்க சில சாதனங்கள்—சில சாதாரண தேக இயக்கங்கள், சரீர முயற்சிகள்—போதும்.

சாதனம் இன்றி, ஒன்றைச்
சாதிப்பார் உலகில் இல்லை.

என்பது உண்மை; உண்மையினும் உண்மை. சரீர—சாதனம் அல்லது உடல்வலித் தொழில்களால் விளையும் சித்திகள் பல. ஆனல் இவற்றுள் மூன்று அதி முக்கியமானவை. முதலாவது உடல்வளம் அல்லது ஆரோக்கியம். இரண்டாவது உடல்வனப்பு அல்லது அழகு. மூன்ருவது உடல்வலிமை அல்லது சக்தி. இம் முப்பெருஞ் சித்திகளும், தேகமுயற்சியென்னும் சாதனத்தால் விளைகின்றன. சாதனமும் பிரமாதமானதன்று—சாதாரணமானதுதான். கிழவரும் கைக்கொள்ளலாம்; குமரரும் கைக்கொள்ளலாம்; குழந்தைகளும் கைக்கொள்ளலாம்; ஆண்களோடு பெண்களும் கைக்கொள்ளலாம், வெள்ளையரும் கைக்கொள்ளலாம்; கறுப்பரும் கைக்கொள்ளலாம். செக்கிற—மஞ்சள் நிற மக்களும் இச்சாதனங்களால் சித்தி பெறலாம். இவற்ருல்பலவீனர்பலம்பெறலாம்; பலவான்கள் இன்னும் அதிக பலம் பெறலாம். கிழவர் குமரர் ஆகலாம். குமரர் இன்னும் அதிக இளமை பெறலாம். ஆரோக்கிய முள்ளவர் மேன்மேலும் அதிக ஆரோக்கிய முற்று வாழலாம். அழகில்லாதார் அழகு பெறலாம். ஏற்கெனவே உடல்—வனப்பு வாய்க்கப் பெற்றவர் இன்னும் அதிக அழகு பெற்று இன்ப வாழ்வு வாழலாம். இத்தகைய பாடத்தினை நாம் ஸான்போர்ட் பென்னெட் என்னும் பெயர் புனைந்த புதிய மார்க்கண்டேயரது திவ்விய சரித்திரத்திலேபடிக்கின்ருேம். அடுத்த வாரம் இக்கதை வெளியிடப்பெறும்.

---

## சில குறிப்புக்கள்.

தமிழ் நாட்டில் தலைவர்கள் தோற்றவில்லை. வடநாட்டில் உலகம் புகழும் தலைவர்களும், வீரர்களும் ஆராய்ச்சியாளரும் தோன்றியிருக்கின்றனர். தனித்தனி மனிதராக நின்று இந்தியாவுக்குப் பேரும் புகழும் அளித்து வருகிற சுவாமி விவேகாநந்தர், ஜகதீச சந்திர போஸ், கவீந்திரர் டாகூர், பி. சி. ராய், மகாத்மா, திலகர் முதலியோரை அறியாதார் யாவர்? தயாநந்தர் இராமகிருஷ்ண பரமஹம்சர், சிரத்தாநந்தர், பந்தார்க்கார் போன்ற அறிவாளிகளையும், லாலாஜி, அரவிந்தர், தாஸ் போன்ற சமூக சேவகர்களையும்பெற்றிருப்பினும், தமிழ் நாட்டிலுள்ளவர் பெயர் இப்பட்டியலில் சேர்க்கும்படி அகப்படவில்லையே?

ஃ ஃ ஃ

தமிழ் நாட்டில் எத்தனையோ பிள்ளைகள் பிறந்துகொண்டுதானிருக்கின்றனர். பெருமுயற்சி செய்து பிள்ளைகளைப் பெறுகின்றனர். அவற்றுள் மேற்கூறிய அறிஞர் கூட்டத்தில் ஒன்றாவது சேரக்கூடாதா? படிப்பிலாவது அறிவிலாவது ஆராய்ச்சியிலாவது தொழிலிலாவது ஆன்மஞானத்திலாவது ஒரு தமிழன் சிறந்து வெளிப்போந்து இந்திய நாட்டின் பெருமையைப் பெறக் கூடாதா? ஏன் பெறவில்லை? வங்காளம் மராட்டம் கூர்ஜரம் முதலிய பகுதியிலுள்ள இந்தியர்கள் முன்னேறியது போல ஏன் தென்னாட்டுத் தமிழ் மகன் முன்னேறவில்லை யென்பதை அறிய வேண்டும். தமிழனுக்குப் புத்தியில்லையா? பொருளில்லையா? எல்லாத் தமிழனும் அறிவுகெட்டாவது உடஊனத் துடனாவது பிறக்கிறானென்று கூறமுடியாது.

ஃ ஃ ஃ

சமயத்துறையில் விழுந்து கிடக்கிறவரின் தொகை குறைவில்லை. ஆங்கில கலாசாலைகளில் படிப்போரும் போதிய அளவிருக்கின்றனர். விவசாயத்திலும் எண்ணற்றோர் ஏர் பிடித்து நிற்கின்றார். அரசியலில் பலர் முன்னிற்கின்றனர்? எனினும் எந்தத் துறையிலாவது உலகினரால் பாராட்டப்படக் கூடிய ஒரு தமிழ் மகன் தோன்றவில்லை. இதைவிடத் தமிழ் சமூகத்திற்கு என்ன அவமானம் வேண்டும்? இப்படியாக முன்னேற்றமடையாமல் பிறப்பதும் தன் உடலைப் பேணிக்கொண்டு சின்னாளிருந்து மாண்டொழிந்து போவதற்கும் காரணமென்னையென்பதை ஒவ்வொரு தமிழ் மகனும் உய்த்துணர்தல் வேண்டும்.

ஃ ஃ ஃ

தமிழ் நாட்டிற் பிறக்கும் குழந்தைகள் உயர்ந்த அறிவுபெற்று மேன்மை யுறுதற்கு சாதனங்களில்லை. தமிழ் நாட்டில் உயர்ந்த கலாசாலைகள் இடையா. அறியாமையையும் அடிமைத் தனத்தையும் போதிக்கும் கலாசாலைகளுண்டு. தம்ஆயுள்காலம் முற்றும் கற்றுவல்லவர்களாக இருக்கும் பண்டிதர்களும் அறியாமைக் கடலாகவே விளங்குகின்றனர். சமயவாதிகள் தமது சமய நூல்களை யன்றிப் பிற நூல்களைப் படித்தல் பாவமென்று போதித்து அழிகின்றனர். பல வேறு வகைப்பட்ட நூல்களை மக்கள் படியாதவரையில் அறிவு பண்படுவதென்பது முடியாத காரியமாகும். தஞ்சமய நூல்களைப் படித்தாலும் அதில் எவ்வித ஆராய்ச்சியும் செய்யக்கூடாதென்றும் அது இறைவன் வாக்கென்றும் இறைவன் அருள்பெற்றதென்றுங் கூறி ஆராயவொட்டாது முளையிலேயே மக்கட் குண்டாகும் ஆராய்ச்சி யறிவை நசுக்கிவிடுகின்றனர். நன்றாகப் படித்தவரென்று பிறரால் மதிக்கப்பெறுபவரே புத்தகப் பூச்சியாக இருப்பாராயின் தமிழ்நாட்டில் படிப்பு அறிவு—வளர்ச்சி, பட்டுக் கிடப்பதில் ஆச்சரியமொன்றுமில்லை.

ஃ ஃ ஃ

‘சாத்திரங் கோடி வைத்தான் அவை தம்மினு முயர்ந்ததோர் ஞானம் வைத்தான்’ என்ற வாக்கு மாய்க்கப்பட்டிருக்கிறது. சாஸ்திரம் எழுதிவைத்தவர் பலராவர். அறிவுகெட்ட பலர் வயிற்றுப் பிழைப்புக்காகப் பலநூல்—குப்பைகளையும் எழுதிக் குவித்துள்ளார். கடவுளென்பதென்ன என்ற உணர்வற்ற பலர் கடவுளைப்பற்றி ஆயிரக் கணக்கான கதைகளை ஆபாசக் களஞ்சியமாகக் கட்டி யெழுதி வைத்திருக்கிறார். பிற சமயத்தவரை இழிவு படுத்துதற்காகக் கோடி புராணங்கள் எழுதிக்குவிக்கப்பட்டிருக்கின்றன. இவையாவும் மெய்ந்நூலென்றுகொள்ளவேண்டுமென்றும் இப்புல்லிய நூல்களையும் உயர்ந்த சாத்திரங்களாகவும் கடவுள் வாக்காகவுங் கொண்டமையவேண்டுமென்றும் தமிழ்நாட்டுக் கல்வியாளர் கழறுகின்றன ரென்னில் இங்குஅறிவுவளர வழியுண்டோ?

ஃ ஃ ஃ

தான் கற்ற புராணங்களைத் தன் தங்கை தமக்கை தாயாருடனிருந்து படிக்க முடியாத நிலையில் அவை யெழுதப்பட்டிருக்கின்றன. சில அழி புராணங்கள் தனக்குத்தானே படிப்பதற்கும் முடியாத அசங்கியமான விஷயங்களைக் கொண்டிருக்கின்றன வென்பதைப் படித்தவரே யறிவர். அவைகளும் பரமசிவனும்பார்வதி தேவியாருக்குரைக்கப்பட்டன வென்று கூறுவது அதன் ஆசிரியனது முட்டாள் தனத்தை யறிவிக்கிறது. இந்நூல்கள் சத்திய வேதத்தின் பாற்பட்டன வென்று கூறும் குருடரைப் பின்பற்றிச் செல்லும் தமிழ் மாணவர் உண்மைகாண்பதெங்ஙனம்? ஒவ்வொரு நூலையும் ஆராய்ச்சி வழியில் பார்த்தாலன்றி நம் நாட்டில் கிடக்கும் புன்மை நெறிகளைக் கண்டொதுக்குதல் முடியாத காரியம். இப்படியே மூடத்தனத்தை வளர்த்துக் கொண்டு அறிவுக் கண்ணைக் கட்டிவிட்டு ஆயிரம் புத்தகத்தைப் படித்தாலும் உருப்போட்டாலும் பயனேற்படப் போவதில்லை. ஒழுக்கத்திற்கு மாறுபட்ட நூல்கள் யாவும் நெருப்பிலிட்டுப் பொசுக்கி விட்டாலும் புண்ணியமுண்டு. சில நூல்கள் ஒழுக்கத்தைச் சிதைப்பதற்கே—தன்னம்பிக்கையை நீக்குதற்கே—மூடத்தனத்தைப் பெருக்குதற்கே—ஆண்மையைத் தேய்ப்பதற்கே—சோம்பரை ஆக்குதற்கே—எழுந்தனவோ என்று ஐயுறுமாறிருக்கின்றன. தமிழ் மக்கள் உண்மை யறியாது மூடத்தனத்திற் கிடந்து சீரழிவதற்கு முக்கிய காரணம் தமிழ் நூல்களைப் பற்றிய ஆராய்ச்சி நூல்கள் எழாமையே யாகும். ஆராய்ச்சி செய்தால் பக்தி குன்றுமென்பதை நமது மக்கள் உணரவேண்டும். அறியாமையினாலேயே, ஆராய்ச்சி செய்வதால் குடி முழுகிப்போகுமென்றுபயப்படுகின்றனர்.





## வெயிலின் கொடுமை.

இவ்வருஷம் எறிக்கும் வெய்யில் மாதிரி நான் எனது அனுபவத்தில் இது வரை பார்த்ததேயில்லை. காலை ௭ மணி தொடங்கி சாயந்திரம் ௬ மணி வரை நாள்தோறும் சகல ஜீவராசிகளும் பட்டு வரும் கஷ்டத்தைப்பற்றி இந்நாட்டில் வசித்துவரும் எனது சகோதர சகோதரிகளுக்கு எடுத்துக் காட்ட வேண்டுவதில்லை. வெய்யிலில் வெளிகளில் போய்வருவது தான் சாத்தியமில்லையே. வீட்டிலிருந்தாவது வெய்யில் நேரத்தைக்கழிக்கலாமென்று எண்ணினாலோ, நமது ஆடவர்கள் வெளிநாடுகள் சென்று சம்பாதித்து வரும் பெரும் பொருள்களை அப்படியே கொட்டிச் செலவு செய்து கட்டியிருக்கும் அரண்மனைக் கொப்பான வச்சிரக்கட்டு மாளிகைகளில் ஒரு நிமிஷம் இருக்க முடியுமா? இதைப்பற்றிச் சிந்தித்து அறிவைப் பயன்படுத்தி நல்ல காற்றோட்டமுள்ள அடக்கமான பங்களாக்கள் கட்டி சுகமாக வாழவேண்டுமென்று நமது சகோதரர்களுக்குச்சொல்வதோடு இன்னொன்று முக்கியமாகச் சொல்லுகிறேன். நமது பெண்மணிகள் இந்த வெய்யிலில் வெளிகளில் போய் வந்து திரிகிறார்களே; ஏதாவது காலில் நடையன் போட்டுக் கொள்வதுண்டா? குடை பிடிப்பதுண்டா? நடையன் குடை முதலியன உபயோகப் படுத்திக் கொண்டுகூட வெளிகளில் செல்ல நமக்குப் பயமாக இருக்கிறதே! இந்த நிலைமையில்அவர்கள் ஒன்றும் உபயோகியாமல் நடுப்பகல் நேரங்களில் சென்று வருதல் பார்ப்போர்க் கெல்லாம் பரிதாபகரமாக இருக்கவில்லையா? நடையன் குடையை, பெண்கள் உபயோகப்படுத்தினால் பலர் இழிவாக எண்ணுவார்கள் என்று நினைக்கிறார்கள். இழிவான செய்கைகள் பல நிறுத்த வேண்டியவை வளர்ந்து கொண்டே போவதை நிறுத்த வேண்டுமே தவிர நடையன் குடையைப் பெண்கள் உபயோகப்படுத்துவது மிக அவசியமாக வேண்டற்பாலதாகலின் எனது சகோதரர்களெல்லாம்பெண்களைக் கட்டாயம்வெய்யிலில் நடக்க நேருமேல் நடையன் குடைகளை உபயோகப்படுத்தச் செய்ய வேண்டுவது பெருங்கடமை. நிற்க. இதைக்கண்ணுறும் எனது சகோதரிகளும் கட்டாயமாக வெய்யிலில் வெளிகளிற் செல்ல நேர்ந்தால் வெறுங்காலோடு நடந்து சென்று கஷ்டப்பட்டுச் சாக நினைக்காமல் நடையன் அணிந்து சென்று சுகமாக வாழ நினைக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

நாவுக்கரசன்.

## ஊன் உண்போர்க்கு உரைக்கும் புத்தி.

சுவாமிக்கு சுவாமிக்கு என்று ஒருவர் இரண்டு மூன்று ஆடுகளை வெட்டி அதனுடைய உயிரை எமனுலகுக்குஅனுப்பிவிட்டு உடலை மாத்திரம் வாசலில் தோரணங்களாகக் காயப் போட்டு எடுத்து மூடிவைத்துக் கொண்டு நாளுக்கு நாள் அவித்தும் பொரித்தும் தின்று தங்களுடைய ஊனை முக்குருணி அரிசிப் பிள்ளையார் மாதிரி வளர்த்துப் பயன் என்னை? ஊனைத் தின்று ஊனை வளர்க்கலாமா? அப்படித் தின்பவர்கள் ஏழைகளாகிய ஆடுகளையும் கோழிகளையும் மாத்திரம் ஏன் தின்ன வேண்டும்? காட்டில் திரியும் நரி, காடி, புலி ஆகியவைகளை ஏன் தின்னப்படாது? ஐயோ! உங்கள் காலில் ஒரு கருவேலமுள் தைத்து விட்டால் எவ்வளவு வலி வலிக்கின்றது அதை எடுக்காமல் நடக்க முடியுமா? ஆடுகளின் கழுத்தில் கத்தியை வைத்து கொற கொற வென்று அறுத்தால் அவைகளுக்கு வலிக்காதோ? ஐயோ! நீங்கள் மாத்திரம் துங்கள் பெண்டிர் பிள்ளைகளுடன் சுகமனுபவித்துக்கொண் டிருக்கிறீர்களே! ஆடுகளும் கோழிகளும் உங்களைப் போல் சுகமனுபவிக்க பாத்திரர்கள் இல்லையோ! இது என்ன அநியாயம்! உங்களுக்காக கடவுள் எவ்வளவு தாவரவர்க்கங்களைப் படைத்திருக்கிறார். அவைகளை யெல்லாம் விட்டு ஒரு பிராணியின் ஊனைத் தின்று பிராணியின் ஊனை வளர்ப்பது எவ்வளவு அறியாமை! காட்டில் திரியும் ஐயறிவு மிருகங்களாகிய காடி புலிகளல்லவோ, இன்னொரு ஜந்துவினுடைய ஊனை உண்ணும். உங்களுக்கு சரியாக ஆறறிவும் கடவுள் கொடுத்திருக்க, அதை ஏன் நீங்கள் ஐயறிவாக்கிக்கொள்ளுகிறீர்கள்? நீங்கள் சரியாக ஆறறிவு படைத்துப் புத்தியுள்ளவர்களானால் ஆடு கோழிகளை அறுக்காதீர்கள்! தாவரங்களாகியகீரைகத்தரிக்காய் முதலியவைகளைப் புசித்துசுகமாகவாழுங்கள்!

ராம. சம்பந்தன்.

முகாந்தரம்
காட்டவேணுமென்பதற்காக
## நோட்டீசு.

ஸப் டிவிஷனல் கோர்ட்டு, மியானுங்,
ஹென்சாடா,
ஸிவில் ரெகுலர் ஸூட் நம்பர் 32, 1925.

எம். வ. எம். கடை ஏஜெண்டு சின்னக்கருப்பன் செட்டியார், } வாதி.
லேவாதேவி ஜீவனம்.
மெயிலின் தெட் என்பவரும் ஐந்து பேர்களும் } பிரதிவாதி.

மியானுங் ஆர். எம். எஸ். சவுமிய அம்பலத்திற்கு முடிவான டிக்ரியாக வேண்டுமென்று இந்தக்கோர்ட்டார்முன்னிலையில், வாதி விண்ணப்பம் செய்துகொண்டதால், 1926 ஜூன் மீ 10ந்தேதி காலை 11-மணிக்கு நீர் நேரிலாவது சரியான இன்ஸ்ட்ரக்ஷன் பெற்ற அட்வொகேட் அல்லது கோர்ட்டு ப்ளீடர் மூலமாயாவது ஆஜராகி, வாதி விண்ணப்பத்தை ஆட்சேபித்து முகாந்தரம் சொல்லவேணு மென்பதற்காக, உமக்கு இந்த நோட்டீசு பிறப்பிக்கப்பட்டிருக்கிறது. தவறினல், குறித்த விண்ணப்பம் விசாரணை செய்யப்பட்டு, எக்ஸ் பார்ட்டியாக தீர்மானம் செய்யப்படும். 1926 மே மீ 15உ கோர்ட்டு முத்திரையும் என் கையெழுத்தும் இடப்பட்டன.

எம். ஜி. செயிங்,
ஜட்ஜ்.

## குமரன்—வாரப்பதிப்பு

வருஷ சந்தா உள்நாட்டுக்கு ரூ ச-0-0
,, வெளிநாடுகட்கு ரூ ரு-0-0
மாதிரிப் பிரதி இனம்.

## விளம்பர விகிதம்.

மாதம் ஒன்றுக்கு பத்தி
ஒன்றுக்கு ரூ உ0-0-0
மாதம் ஒன்றுக்கு பத்தி
அரைக்கு ரூ கக-0-0
ஷை பத்தி காலுக்கு ரூ சு-0-0
நீண்டகால விளம்பரம் செய்வோர் நேரே ஆபீசுக்கு எழுதவேண்டுகிறோம்.

## குமரன்—மாதப்பதிப்பு.

வருஷ சந்தா உள்நாட்டுக்கு ரூ க-0-0
,, வெளிநாடுகட்கு ரூ க-அ-0
தனிப்பிரதி ரூ 0-ச-0

மானேஜர்,
குமரன் ஆபீஸ், காரைக்குடி.



சோ. முருகப்பசெட்டியாரால் (பத்திராதிபர்) காரைக்குடி 'குமரன்' அச்சுக்கூடத்தில் அச்சியற்றிப்பிரசுரிக்கப்பெற்றது.

